வேதமே தர்மத்தின் மூலம்

# ஸ்ரீ ஆதி சங்கரரின் திவ்ய சரித்திரம் மற்றும் பூஜாவிதி



*Compiled by*
**பி.ஆர். நடராஜன்**

*Published by*
வேலூர் மஹா ருத்ரயாக கமிட்டி
92, L.I.C. காலனி, காகிதப்பட்டறை, வேலூர் - 632012

வேதமே தர்மத்தின் மூலம்

# ஸ்ரீ ஆதி சங்கரரின் திவ்ய சரித்திரம் மற்றும் பூஜாவிதி



*Compiled by*

**பி.ஆர். நடராஜன்**

*Published by*

வேலூர் மஹா ருத்ரயாக கமிட்டி

92, **LIC** காலனி, காகிதப்பட்டறை, வேலூர்-632012



1

# முன்னுரை

நம் தாய் போன்ற, காலவரையற்ற ஹிந்து சனாதன தர்மத்தை உலகுக்கு தந்த பெருமை நம் பாரத புண்ய பூமியையே சேரும். கருணையே வடிவான ரிஷிகள் வகுத்துத் தந்த இம் மார்கத்தை காலம் செல்லச் செல்ல, நம்மவர்கள் அறியாமையாலும், கவனமின்மையாலும், அற்ப ஆசை காரணமாக கைவிட்டு விட்டு, மனம் போன போக்கில் போக பலன்களை அனுபவித்து வந்தனர். பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் இந்த அவல நிலையையும் வைதிக கர்மாக்களையும், எதிர்த்து வந்த பௌத்த சமண மதங்களை சார்ந்தவர்கள் நடைமுறைக்கு ஒவ்வாத தீவிர அகிம்சா மார்கத்தையும் சூன்ய வாதத்தையும் பறைசாற்றி வந்தார்கள்

வேறு சில மதங்களும், இத்தகைய ஒருதலையான ஆபத்தான முன்னுக்கு பின் முறனான கொள்கைகளை முன் நிறுத்தி, உபதேசித்து குழப்பங்களை உண்டுபடுத்தி, ஓங்கியிருந்தன. வேத நெறியை எதிர்த்து வந்த அம்மதங்களை வேதம், உபநிடதம், பகவத்கீதை மற்றும் ரிஷிகளின் வாக்கை அடிப்படையாகக் கொண்டு அம் மதங்களின் கொள்கைகளைத் தர்க்கரீதியில் தகர்த்தெறிந்து இவ்வாறான விபரீதமான நிலையிலிருந்து நம் சனாதன தர்மதை மீட்டு தந்த சமய பெரியோர்களின் வரிசையில் முதன்மையானவர் ஸ்ரீ சங்கர பகவத் பாதர் ஆவார். ஸ்ரீமத் ஆச்சாரியர் அத்துடன் கர்மா,ஷபக்தி, ஞான யோகங்கள் அடங்கிய முழுமையான வேதாந்த மார்கத்தை நிலை நிறுத்தி அத்வைத சம்பிரதாயத்தை நிறுவினார். மேலும் அவர் பகவத்கீதை, உபநிடதம், ப்ரம்ம சூத்திரம், ஆகியவற்றுக்கு ஒப்பற்ற பாஷ்யங்கள் (விளக்க உரைகள்) எழுதி நம் பாரதத்துக்கு தொண்டு புரிந்தார். பின்நாளில் அவர் வித்திட்ட உயர்வு தாழ்வு பாரா எளிய பக்தி மார்கமானது ஓங்கி வளர்ந்து பாரதமெங்கும் பரவியது. மேலும் ஐந்து சங்கர மடங்களை (சிருங்கேரி, துவாரகா, பூரி, ஜோஷிமட் மற்றும் காஞ்சீபுரம்) ஸ்தாபித்தவர் இவரே ஆவார். அவரைப் போற்றி துதிப்பது அவருக்கும் நமது ஹிந்து மதத்துக்கும் நாம் புரியும் தலையாய கடைமையாகும்.

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு சங்கராச்சாரியார் அனுக்கிரத்தை முன்னுட்டும் பகவத் கிருபையை முன்னிட்டும் இந்த

பதினோராம் ஆண்டு கோடி காயத்ரி ஜபயக்ஞத்தில் ஸ்ரீ ஆதி சங்கர பகவத் பாதாள் அவர்களுடைய திவ்ய சரித்திரத்தை கேள்வி ரூபதில் வடிவத்திலும், சங்கர பூஜாவிதி, தோடகாஷ்டகம் சேர்த்து புத்தகமாக அச்சடிக்கப்பட்டு வெளியிடுவதில் மிக்க மகிழ்ச்சி அடைகிறோம்.

இந்த புத்த வெளியீட்டிற்கான தொகுப்பை தொகுத்து தந்த ஸ்ரீ பி.ஆர். நடராஜன் அவர்களுக்கும், இப்புத்தகத்தை அழகுற வடிவமைத்து கொடுத்த டிஜிட்டல் டிசைன்ஸ் ராஜன் அவர்களுக்கும், நேர்த்தியாக அச்சடித்துக் கொடுத்த எம்.எஸ்.எஸ். சர்மா பிரஸின் உரிமையாளரான ஸ்ரீ தண்டபாணி அவர்களுக்கும் இந்த கமிட்டி சார்பில் நன்றியை தெரிவித்துக் கொள்கிறோம்.

நமது சமுதாயத்தை சேர்ந்த அனைவரும் இந்தப் புத்தகத்தை பின்பற்றி நமது ஹிந்து மதத்தை போற்றி சனாதன தர்மத்தை நிலை நாட்டிட வேண்டும். இதுவே எங்களது ப்ரார்த்தனை.

வேலூர்-12
19.02.2017

வேலூர் மஹா ருத்ர யாக கமிட்டி
வேலூர் 632012



ஓம் விக்னஹர்த்ரே நம:







சதாசிவசமாரம்பாம் சங்கராசார்ய மத்யமாம்
அஸ்மதாசார்ய பர்யந்தாம் வந்தே குருபரம்பராம்

ஸ்ரீ குருப்யோ நம:

***கேள்வி: இந்த த்யான ஸ்லோகம் சொல்வதின் அவசியமென்ன?***

விடை: குரு என்பவர் ஞானதாதா. அக்ஞான இருளைப் போக்குவதற்கான வழியைக் காட்டுபவர். குருவின் அநுக்ரஹம் கிடைத்தால் தான் ஞானத்தை பெறமுடியும். ஞானம் கிட்டினால் தான் சம்சாரக் கடலைத் தாண்ட முடியும். நாம் நற்கதியையும் பெற முடியும். கைலாச பதியான பரமேஸ்வரன் தான் முதல் குரு. மஹேஸ்வரன் ஞானதாதா. அவர் ஸநகஸநந்தநாதி முனிவர்களுக்கு உபதேசம் செய்யும் நோக்கத்தோடு தக்ஷிணாமூர்த்தி ரூபங்கொண்டு ஆலமரத்தடியில் த்யானத்தில் ஆழ்ந்தார். மௌனத்தை அந்த குரு அநுஷ்டித்த போதிலும் அருகில் நின்றிருந்த மஹரிஷிகளுக்கு சந்தேஹம் விலகி, உண்மை விளங்கியது.

அவர் காட்டிய சின் முத்திரையிலிருந்து ஜீவாத்மாவும் பரமாத்மாவும் வேறல்ல, ஜீவேசர்கள் இரண்டல்ல, ஒன்று தான் என்னும் ஞானத்தைப் பெற்றார்கள். அபேதமில்லாத ஐக்கியத்தை உணர்ந்தார்கள். தெய்வத்திடமிருந்து ரிஷிகளுக்கு ஞானமும் மந்த்ரங்களை பார்த்து அறிந்து கொள்ளும் பாக்கியமும் ஏற்பட்டது.

சாமானிய மனிதர்களுக்கும் உண்மை விளங்கவேண்டுமே! அவர்களும் பிறவிப் பயனை அடைய வேண்டும் அல்லவா? அதற்காகவே பரம கருணா மூர்த்தியான பரமேஸ்வரன் ஸ்ரீ சங்கர பகவத் பாதராக அவதரித்து நாம் சம்சார கடலிலிருந்து கரையேற 'அத்வைதமென்னும்' சன்மார்க்கம் காட்டினார். அந்த 'ஜகத்குரு' தன்னை கௌடபாதரின் சிஷ்யரான கோவிந்த பகவத் பாதரின் சிஷ்யராகக் காட்டிக் கொண்டு குருவின் மஹத்துவத்தை நமக்கெல்லாம் புரிய வைத்தார்.

அந்த ஞான உபதேசங்கள் தொடர்ந்து வருவதற்காக மடங்களை நிறுவி தனது சிஷ்யர்களை ஞான உபதேசத்திற்கான அதிகாரிகளாக்கினார். அப்பரம்பரையில் வந்த நமது பூஜைக்குரிய குருவை நாம் முதலில் பணிவுடன் வணங்க வேண்டும். மேலும் குரு என்னும் பதத்தின் பொருள் அக்ஞானமாகிய இருளைப் போக்கும் மதிப்புக்குரிய பெரியவர் என்பதாகும். தவிர, ஞான வ்ருத்தர்களையும், தபோ வ்ருத்தர்களையும், உயர்ந்த குருக்களாக கொண்டாட வேண்டும் என்கிறார் மநு.

### *2. தர்மத்தை அநுஷ்டிப்பவர்களுக்கு எத்தனை 'குரு'க்கள் உண்டு?*

பாகவத்தில் க்ருஷ்ண குசேல சம்வாதத்தில் வர்ணாஸ்ரம தர்மத்தை அநுஷ்டிப்பவர் ஒவ்வொருவருக்கும் மூன்று குரு உண்டு என்கிறார் க்ருஷ்ணன். முதலாவது குரு ஜன்மாவை அளிக்கும் தகப்பனார். இரண்டாவது குரு, உபநயனம் முதலிய சம்ஸ்காரங்களை செய்வித்து, வித்யை, சத்கர்மா இவைகளுக்கு யோக்யதையை உண்டாக்கி தருபவர். இவர்கள் இருவருக்கும் மேலான மூன்றாவது குரு 'ஞானத்தை' தருபவர் ஆகும்..

### *3. அப்படியானால் 'ஜகத்குரு' என்பவர் யார்? அவர் எப்படி இருக்க வேண்டும்? யாரையாவது எடுத்துக்காட்டாகச் சொல்ல முடியுமா?*

ஜகத்குரு என்னும் பதம் ஒருவருக்கு பொருந்த வேண்டுமென்றால் அவரிடம் ஞானம் தபஸ் இரண்டும் இருக்க வேண்டும். 'தரதி சோகம் ஆத்மவித்' - ஸ்ருதி. அவர் சோகத்தை மாற்றக்கூடிய ஞானத்தை தருபவர். அவர் அவதாரம் எடுத்த பகவானோ அல்லது பகவத் சக்தி நிறைந்த ஞானியாகவோ தான் இருக்க முடியும். அந்த ஞானி எல்லா வர்ணத்தாருக்கும், எல்லா ஆஸ்ரமிகளுக்கும், எவ்விதமான

அதிகாரிகளுக்கும் மனதிலும் ஞான ஒளியை ஏற்றக் கூடிய ஆற்றல் பெற்றவராக இருக்க வேண்டும். 'பூத தயாம் விஸ்தாரய' அதாவது சமஸ்த ஜீவராசிகளுக்கும் மனதில் தயையை நிரப்பிக் கொண்டு நல்லது பண்ணிக் கொண்டே இருக்க வேண்டும். அதற்கு எல்லையற்ற தபசும் எல்லா ஜீவராசிகளிடமும் அன்பும் கருணையும் வேண்டும். அந்த குரு உலகத்திற்கு ஞானத்தை உபதேசிப்பார். அந்த ஞானத்தை அடையும் சன்மார்க்கத்திற்கு வழிகாட்டியாகவும் இருப்பார். பேத மனப்பான்மையை அகற்றி 'அத்வைதா'னுபவத்திற்கு எடுத்துக்காட்டாக விளங்குவார்.

நாம் அதிகம் சிரமப்படாமலே நாம் செய்த பாக்கிய வசத்தால் நம்மிடையே வாழ்ந்து நம்மையெல்லாம் உய்வித்த மஹான் காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ர சரஸ்வதி மஹாஸ்வாமிகளே (மஹா பெரியவா) 'ஜகத்குரு'வுக்கு ஓர் சிறந்த எடுத்துக்காட்டு.

### *4. 'அத்வைதம்' என்பது சங்கரர் ஏற்படுத்திய மதமா? 'அத்வைதானுபவம்' என்பது எப்பொழுது ஏற்படும்? அவர் எதை ஆதாரமாகக் கொண்டு அத்வைதத்தை போதிக்கிறார்?*

அத்வைதம் என்பது ஒரு மதமல்ல. அது ஆத்ம தத்துவ உபதேசம். ஆன்மாவின் (நித்தியத்தை) அழியாத தன்மையை உணர அத்வைதம் வலியுறுத்துகிறது. உடலின் அழியும்தன்மையை (அநித்தியத்தை) அத்வைதம் எடுத்து உரைக்கிறது. ஜீவாத்மாவும் பரமாத்மாவும் இரண்டும் ஒன்றே என அத்வைதம் போதிக்கிறது. ஆகவே, ஜீவேசர்களை இரண்டாக எண்ணி சம்சார சாகரத்தில் கரையேற முடியாமல் தவிப்பதை தவிர்த்து, நித்தியாநித்திய விவேகம் பெற்று சாஸ்வதமான பரமாத்வோடு ஜீவாத்மாவை ஒன்றாக ஐக்கியப்படுத்திக் கொள்ளப் போதிக்கிறது.

'ஜீவோ ப்ரஹ்மைவ நாபர:' (ஜீவன் ப்ரஹ்மத்தை தவிர வேறு அல்ல) என்னும் ஐக்கியமித்திய பாவனையை வளர்த்து, 'ப்ரஹ்மைவாஹமஸ்மி' என்னும் சிந்தனையிலேயே மூழ்கி இருந்தால், அதுவாகவே (ப்ரஹ்மமாகவே) மாறி விடுவோம் என்னும் சன்மார்க்கத்தை காண்பிக்கிறது. அப்பொழுது பரம உத்க்ருஷ்டமான (மிகவும் உயர்ந்ததான, அதற்கும் மேலே ஒன்றும் இல்லாததான) அத்வைதானுபவம் ஏற்படும்.

நம் வேதங்கள் அநாதியானவை. அவைகள் அபௌருஷேயம். பல்லாயிரக்கணக்கான வருடங்களாக தர்மத்திற்கான சன்மார்க்கமாக இருந்து கொண்டிருக்கிறது. அவைகளில் உள்ள மஹாவாக்யங்களை ப்ரமாணங்களாக்கி, அவைகளுக்கு விளக்கம் தந்து, தெளிவுபடுத்தி, அத்வைத ஞான உபதேசத்தை நமக்கு சங்கரர் அருளுகிறார். வேதங்களையும் உபனிஷத்துக்களையும் அடிப்படை ஆதாரமாக கொண்டே நமக்கு அத்வைதத்தை உபதேசிக்கிறார்.

ப்ரதானமாக கருதப்படும் மஹா வாக்யங்கள் நான்கு. ஒவ்வொரு வேதத்திற்கும் ஒன்று என அமைகிறது. முதலில் 'ப்ரக்ஞானம் ப்ரஹ்மா.' இது ரிக் வேதத்தில், ஐதரேய உபநிஷத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. 'உயர்ந்த ஞானமே ப்ரஹ்மம்.' அறிவாற்றலே ப்ரஹ்மம். இது நமக்கு ப்ரஹ்மத்தைப் பற்றி அறிந்துக்கொள்ள அதன் லக்ஷணத்தை சொல்கிறது. அதனால் இதற்கு லக்ஷண வாக்யம் என்று பெயர். (தத்போத ஞானம்)

அடுத்ததாக, 'தத் த்வம் அஸி' (தத்வமஸி) என்பது. இது சாம வேதத்தில் சாந்தோக்ய உபநிஷதத்தில் சொல்லப்படுகிறது. ப்ரஹ்ம ஞானத்தைத் தேடும் ஜீவனுக்கு, 'அதுவே நீயாக இருக்கிறாய்' என்று உபதேசிக்கிறது. அதனால் இது குருவின் உபதேச வாக்யமாகிறது. நாம் அறிந்த விஷயங்களைக் கொண்டு எதை எப்படி அறிந்துக்கொள்ள வேண்டும் என விளக்கப்படுகிறது. (சிவ ஞானம்). இதை அடித்தளமாக வைத்து ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் உள்ள ஐக்கியத்தை 'வாக்ய வ்ருத்தி' என்னும் அவரது நூலில் சங்கரர் நிருபணம் செய்கிறார்.

மூன்றாவதாக வருவது 'அயம் ஆத்மா ப்ரஹ்மா' - இது அதர்வண வேதத்தில் மாண்டுக்ய உபநிஷதத்தில் சொல்லப்படுகிறது. குரு காட்டிய மார்க்கத்தை அநுசரிப்பதாலும், குருவின் அநுக்ரஹத்தாலும், 'இந்த ஆத்மாவே ப்ரஹ்மம்' என்று முமுக்ஷுவால் உணரப்படுகிறது. அதனால் இது அநுபவ வாக்கியமாகிறது. (சாக்ஷி ஞானம்)

நான்காவதாக வரும் மஹாவாக்யம் 'அஹம் ப்ரஹ்மாஸ்மி.' 'நானே ப்ரஹ்மமாய் இருக்கிறேன்.' இது யஜுர் வேதத்தில் ப்ரஹதாரண்யக உபநிஷதத்தில் சொல்லப்படுகிறது. ப்ரஹ்மம் சாக்ஷாத்கரிக்கும் நிலை. (ப்ரஹ்ம ஞானம்)

*6. வேதம் எங்கிருந்து வந்தது? வேதங்கள் கூறும் விஷயங்கள் என்ன?*

வேதமும் அநாதியான, ஆதியும் அந்தமும் இல்லாத இறைவனிடமிருந்து தான் உண்டாயிற்று. நாம் நெறியோடு வாழ்வதற்கான இறைவனுடைய கட்டளைகள் என்றும் சொல்லலாம். இயற்கை நியதிகளை அனுசரித்து மனிதன் வாழ வேண்டிய முறைகளை சொல்வது வேதம். இறைவன் நமக்களிக்கும் நல்லறிவு. 'நான் யார்' என்று கேள்வியை எழுப்பி, 'ப்ரஹ்மைவாஹஸ்மி' என புரிந்துக் கொண்டு, சம்சார பந்தங்களிலிருந்து விடுபட்டு, நித்தியமான ஆனந்தத்தை அடையும் சன்மார்க்கம். இறை அருள் வேண்டுமென்றால் அவனது கட்டளைகளை கடைப்பிடிக்கத்தானே வேண்டும். நம் நலனுக்காக சொல்லப்பட்டவைகளை நாம் அநுஷ்டிப்பது தானே நமக்கு நல்லது.

*7. ஆதி சங்கரரின் அவதார நோக்கம் என்ன?*

அக்ஞானாந்தர்கஹனபதிதாநாத்மவித்யோபதேசை:
(ஸ்)த்ராதும் லோகான் பவதவசிகாதாபபாபச்யமானான் !
முக்த்வா மௌனம் வடவிடபிநோ மூலதோ நிஷ்பதந்தீ
சம்போர்மூர்த்திஸ்சரதி புவநே சங்கராசார்யரூபா !!

சம்சாரமென்னும் காட்டுத் தீயால் மனிதர்கள் வாட்டப்பட்டு தவித்தனர். உத்தம ஸ்ரேஷ்டர்களான மஹரிஷிகளால் ஆலமரத் தடியில் தியானம் கொண்டவரிடமிருந்து ஞானம் பெறமுடியும். லோகத்தில் பந்தங்களிலும் ஆசையிலும் உழலும் சாதாரணப் பட்டவர்களால் அப்படி முடியாது. அதனால் அபார கருணா மூர்த்தியான பரமேஸ்வரன் நாமிருக்கும் இடத்திற்கு இறங்கி வந்து நமக்கு உபதேசம் செய்து நாம் கடைத் தேற சன்மார்க்கம் காட்டவே, மஹேஸ்வரன் சங்கரராக அவதாரம் எடுத்தார்.

*8. மக்கள் அப்படி மனத்தில் கலக்கம் கொண்டு தவிக்க வேண்டிய நிர்பந்தமென்ன? அவர்கள் அதுவரை அநுஷ்டித்து வந்த சதாசாரம் என்னவாயிற்று? அவைகள் மனஸ்சாந்தியை அளிக்க வில்லையா?*

கலியுகம் தொடங்கியது. இரண்டாயிரம் ஆண்டுகள் கழிந்தன. பிற மதங்கள் ஊடுருவின. காபாலிகர்கள், சாக்தர்கள், சாங்க்யர்கள், சர்வாகரகள், மத்யாத்மிகள் என 72 வித மதப்பிரிவுகள் ஏற்பட்டன.

சக்ரவர்த்திகளும் அரசர்களும் சூன்ய வாதத்தையும் அஹிம்சையும் மையமாகக் கொண்ட புத்த மதத்தை ஏற்று பின்பற்ற ஆரம்பித்தனர். அவர்களின் போதனை மக்கள் மனதைக் கவரும் வகையில் இருந்தது. அவைகளின் தாக்கம் விபரீத விளைவுகளை ஏற்படுத்தியது.

அதுவரை போற்றி வந்த வேதத்தில் நம்பிக்கையை மக்கள் இழந்தார்கள், வேதம் தான் தர்மத்தின் மூலம். தர்மத்தின் ஆணிவேர் வேதம். வேதத்தை துறந்ததால், புரை கண்ட வேரை உடைய வ்ருக்ஷம் போல், தர்மங்கள் க்ஷீணமடைந்தன. பக்தியும், நம்பிக்கையும் குறைந்து போயிற்று. வைதிக கர்மாக்கள் அனுஷ்டானத்திலிருந்து மறையத் தொடங்கியது. ஹிந்துக்கள் போற்றி வந்த சநாதன தர்மம் வலுவிழந்து அடித்தளத்தில் ஆட்டம் கண்டு, மக்கள் மனதில் கலக்கம் மட்டுமே மிச்சமாக நிறைந்திருந்தது. அவைதிகர்கள் போதித்த மதம் போலவே மக்கள் மனதிலும் சூன்யம் வ்யாபிக்க ஆரம்பித்தது.

9. ***துஷ்டர்கள் (அசுரர்கள்) செய்யும் அட்டூஷியங்களை களைந்து அவர்கள் இழைத்த கொடுமைகளைப் போக்கி, அவர்களை நிக்ரஹம் செய்து, சிஷ்டர்களை பாலித்து, தர்மத்தை சம்ரக்ஷணை செய்வதே அவதாரங்களின் நோக்கமல்லவா? அப்படியிருக்க இந்த அவதாரம் ஏற்பட காரணமென்ன?***

பூலோகத்தில் உள்ள சாதாரண மனிதர்களைத் தவிர தேவர்களும் இந்த கலவரத்தால் பாதிக்கப்பட்டனர். வேதங்களில் சொல்லப்பட்ட நல்ல கர்மாக்களை மனிதர்கள் தொடர்ந்து செய்து கொண்டிருந்தால் தேவர்கள் மகிழ்ச்சி அடைவார்கள். ஹோமங்களிலும் யாகங்களிலும் கொடுக்கும் ஹவிஸானது அவர்களுக்கு ஆஹாரமாகிறது. ஹோமத்தில் இடும் அந்த பசும் நெய்யினால் ஆன ஆஹுதி மூலம் ஆஹாராதிகள் ஏற்பட்டு தேவர்கள் சந்தோஷம் அடைகிறார்கள். தேவர்கள் பூலோகத்திலிருந்து வரும் ஆஹாரத்தையே நம்பி யிருக்கிறார்கள். நாம் கொடுக்கும் ஹவிஸினால் சந்தோஷமடையும் தேவர்கள், பூமியில் மழையைப் பொழிய வைப்பார்கள். நல்ல வளத்தை தருவார்கள், தான்யாதிகளை அபிவிருத்தி அடைய செய்வார்கள். பசுக்கள் பால் பொழியும். மொத்தத்தில் பூமியில் சுபிக்ஷம் நிலவும்.

மனிதர்களின் கர்மானுஷ்டானங்கள் குறைந்ததால் தேவர்களுக்கு பெருத்த நஷ்டம் உண்டாயிற்று. கர்மாக்கள், யக்ஞங்கள்,

இல்லையென்றால் அவர்களுக்கு நீர் உணவு இவைகளுக்கு தட்டுப்பாடு ஏற்பட்டு விடும். 'துர்பிக்ஷம் தேவலோகேஷு' ! மநூநாம் உதகம் க்ருஹே!! - அருணப்ரஸ்னம். அதனால் பரமேஸ்வரனிடம் சென்று மறுபடியும் தர்ம மார்க்கம் ஏற்பட்டு, கர்மாக்கள் பூலோகத்தில் நடைபெற அவர் அநுக்ரஹம் செய்ய வேண்டும் எனத் தேவர்கள் அவரை வேண்டி நின்றனர்.

அதனால் அவர்களின் வேண்டுகோளை நிறைவேற்றும் வகையில் மீண்டும் பூலோகத்தில் வேத மார்க்கத்தை ஸ்தாபனம் செய்யவும், மறுபடியும் தர்மம் செழிக்கவும், கர்மாக்கள் நடைபெறவும் தான் யதீஸ்வரராக அவதரிக்கப் போவதை தேவர்களிடம் தெரிவித்தார். அவர் சொல்லியபடி ஸ்ரீ சங்கரராக அவதரித்து ஞானோபதேசம் செய்து மற்ற அவைதிக மதங்களை கண்டித்து ஸநாதன தர்மம் மீண்டும் தழைத்தோங்கச் செய்தார்.

*10. சிவபெருமான் சங்கரராக அவதரிக்க முடிவு எடுத்தவுடன் மற்ற தேவர்களும் உறுதுணையாக தாங்களும் என்ன என்ன அவதாரம் எடுக்க போகிறோம் என்று தீர்மானிக்கப் பட்டதா?*

சங்கர விஜயங்களில் மற்ற தேவர்களும் அவதாரம் எடுத்தார்கள் என காண்கிறது. ப்ரஹ்மா மண்டன மிஸ்ரராகவும், அவருடைய பத்தினி தேவி சரஸ்வதி, மண்டன மிஸ்ரரின் மனைவி சரஸ்வாணியாகவும் (உபய பாரதி என்ற பெயரும் காணப்படுகிறது), சுப்ரஹ்மண்யர் குமாரில பட்டராகவும், ஸ்ரீ மஹா விஷ்ணு பத்ம பாதராகவும், இந்த்ரன் சுதன்வா என்னும் அரசனாகவும் அவதாரங்கள் எடுத்ததாக சங்கரவிஜயங்கள் சொல்கின்றன. மாதவீயம், சித்விலாஸீயம், ஆனந்தகிரீயம், வ்யாஸாசலீயம், மற்றும் கேரளீயம் என்னும் ஐந்து சங்கர விஜயங்கள் முக்யமானதாக அறிஞர்களால் கருதப்படுகின்றன. ராஜ சூடாமணி தீக்ஷிதர் எழுதிய 'சங்கராப்யுதயம்' என்னும் உயர்ந்த நூலிலும் சங்கரரின் கதைகள் சொல்லப் பட்டிருக்கின்றன.

*11. இந்தப் புராண வரலாறுகள் எல்லாம் எந்த நூலில் சொல்லப் பட்டிருக்கிறது?*

சிவரஹஸ்யம் என்னும் புராணம் ராமாயணம், மஹாபாரதம் போன்ற ஒரு இதிஹாஸ ரத்னம். ஜைகீஷவ்யர் என்பவர் இயற்றியது. சிவ ரஹஸ்யம் ஒரு லக்ஷம் ஸ்லோகங்கள் கொண்டது. அதில் ஸ்ரீ

சங்கர பகவத் பாதரின் கீர்த்தி வாய்ந்த சரித்திரம் காணப்படுகிறது. ஸ்ரீ ஆசார்யாளுடைய சரித்திரம் 9வது அம்சத்தில் 16வது அத்தியாயம் முழுவதும் சொல்லப்பட்டிருக்கிறது.

'கேரலே சசலக்ராமே விப்ரபத்ந்யாம் மதம்சஜ: !
பவிஷ்யதி மஹாதேவி சங்கராக்யோ த்விஜோத்தம: !!
- சிவ ரஹஸ்யம்.

ஆநந்த கிரி என்னும் யதி ஸ்ரேஷ்டர் சிவ ரஹஸ்யத்தில் கூறப்பட்டுள்ள ஆசார்யாளின் சரித்திரத்தை ஆனந்த கிரீய சங்கர விஜயத்தில் விளக்கியிருக்கிறார். 72 அவைதிக மதங்களை சங்கரர் கண்டித்து வைதிக மதத்தை ஸ்ரீ சங்கரர் ஸ்தாபித்த விவரங்களும் காணப்படுகிறது. மேலும் கைலாயத்திலிருந்து ஸ்ரீ சங்கர பகவத் பாதர், போக, யோக, வர, முக்தி, மோக்ஷ என்னும் ஐந்து லிங்கங்களை கொண்டு வந்ததாகவும், முக்தி லிங்கத்தை பதரிகாஸ்ரமத்திலும், வர லிங்கத்தை நேபாளத்திலுள்ள நீலகண்ட க்ஷேத்திரத்திலும், மோக்ஷ லிங்கத்தை சிதம்பரத்திலும், போக லிங்கத்தை சிருங்ககிரி க்ஷேத்திரத்திலும், யோக லிங்கத்தை காஞ்சியிலும் பூஜைக்காக ஏற்படுத்தியதாகவும் சொல்லப் பட்டிருக்கிறது.

சிவலிங்கம் ப்ரதிஷ்டாப்ய சிதம்பர ஸபாதலே!
மோக்ஷதம் சர்வஜந்தூனாம் புவனத்ரய சுந்தரம் !!
முக்திலிங்கம் து கேதாரே நீலகண்டே வரேஸ்வரம் !
காஞ்ச்யாம் ஸ்ரீ காமகோடௌ து யோகலிங்கமநுத்தமம் !
ஸ்ரீ சாரதாக்யபீடே சிவலிங்கம் போகநாமகம் சக்ரே !!
- மார்க்கண்டேய ஸம்ஹிதை

ஆனந்த கிரீயத்தில் காணும் மற்றுமொரு அபூர்வ தகவல் என்னவென்றால் ஆச்சாரியாளின் வேண்டுகோளுக்கு செவி சாய்த்து மத்யார்ஜுனத்தில் எழுந்தருளியிருக்கும் பரமேஸ்வரன் தனது கையை உயரத் தூக்கி 'ஸத்யம் அத்வைதம்' என்று மூன்று முறை கூறியதாகவும் காண்கிறது.

***12. தர்மத்தை புனருத்தாரணம் செய்ய வேண்டுமென்றால் சற்றேனும் தகுந்த சூழ்நிலை வேண்டுமல்லவா? கைலாச வாசன் அவதரிப்பது என்றால் சிவனை ஆராதிக்கும் க்ஷேத்ரமாகவும் இருக்க வேண்டும் அல்லவா? அதனால்***

***ஸ்ரீ பரமேஸ்வரன் எங்கு சங்கரராக அவதரித்தார்? அவரின் பூலோக பெற்றோர்கள் யார்?***

பரசுராம க்ஷேத்ரம் என்று உயர்வாகப் பேசப்படும் கேரள தேசத்தில் வித்யாதி ராஜர் என்னும் நம்பூதிரி ப்ராஹ்மணர் காலடி என்னுமிடத்தில் வாழ்ந்து வந்தார். அவர் ஆசார சீலராக இருந்தார். அவர் தவறாமல் அநுஷ்டானங்களை செய்து வந்தார். அந்த ப்ரதேசத்தில் பிற மதங்களில் ஊடுருவலின் தாக்கம் சற்றே கம்மியாக இருந்தது. தெய்வ நம்பிக்கைகள், பூஜைகள் ஆராதனைகள் ஹோமங்கள் இப்படி வைதிக மார்க்கமான செயல்கள் ஓரளவு நடந்துக் கொண்டிருந்தன, அவருக்கு சிவகுரு என்னும் புத்திர ரத்னமிருந்தார். தந்தையைப் போலவே சிவகுருவும் வேதாப்யாசங்கள் செய்து முடித்தார். நியமமான அனுஷ்டானங்களை கடைப்பிடித்து வந்தார்.

ஆனால் சிவகுருவுக்கும் அவரது மனைவி ஆர்யாம்பாளுக்கும் ஒரு மனக்குறை இருந்தது. தங்களுக்கு புத்திர பேறு கிட்டவில்லை என்பது தான் அது. அதனால் மிகவும் மனம் வாடிப் போனார்கள். விருஷாசலம் என்று ஒரு புனித ஸ்தலம். அது மிகச் சிறந்த சிவஸ்தலம். விருஷம் என்பது நந்திகேஸ்வரரைக் குறிப்பதாகும். அந்த சிவக்ஷேத்திரத்திற்கு திருசிவப்பேரூர் என்று பெயர், பின்னர் மருவி திருச்சூர் என்று அழைக்கப்படலாயிற்று. அங்குள்ள கல்பக தருவாம் பரமேஸ்வரனை குறித்து இருவரும் 'பஜனம்'என்னும் விரத மேற்கொண்டனர். அநுக்ரஹ உள்ளத்தோடு சிவபெருமான் சிவகுருவின் கனவில் தோன்றினார். 'எப்படிப்பட்ட பிள்ளை உனக்கு வேண்டும்' என சிவபெருமான் கேட்டதற்கு 'உங்களது விருப்பம் எதுவாக இருந்தாலும் எனக்கு சம்மதம்' என்று சிவகுரு கூறியதால், சொற்ப ஆயுள் கொண்ட மேன்மையான குணங்களை கொண்ட சர்வக்ஞன் ஆன பிள்ளை பிறப்பான்' என சொல்லி சிவன் மறைந்தார்.

***13. 'பஜனம்' என்றால் என்ன?***

'பஜனம்' என்பதற்கு சேவை என்று பொருள். அதாவது விரதம் அநுஷ்டிப்பது. ஒரு மாதமோ அல்லது இரண்டு மாதமோ தங்களது இஷ்ட தெய்வத்திற்கான கோயிலை விட்டு அகலாமல் 'அவனேகதி' என்று கோயிலிலேயே இருப்பார்கள். ப்ரதி தினமும் அருகிலுள்ள நீர் நிலையில் நீராடிவிட்டு அந்த இறைவன் சன்னிதானத்தில் அவனைத் துதித்துக்கொண்டு இருப்பார்கள் கோயிலில் கிடைக்கும்

ப்ரசாதமே அவர்களது ஆஹாரம். இரவையும் கோயிலிலேயே கழிப்பார்கள். அந்த விரத காலத்தில் அந்த கோயிலில்தான் அவர்களது புகலிடம்.

### *14. பிறகு சிவனின் அவதாரம் எங்கு, எப்படி ஏற்பட்டது?*

சிவகுரு தனது மனைவியுடன் பஜனம் முடிந்த பின் காலடி திரும்பினார். கோயிலுக்கு சென்று 'பஜனம்' செய்து விட்டு வந்தால் முடிந்த அளவு அன்னதானம் செய்ய வேண்டும். பிறருக்கு போஜனம் செய்விப்பது இறைவனை வழிபடுவதற்கு ஒப்பாகும். 'அன்னம் பஹு குர்வீத' என்று அறிவுறுத்துகிறது தைத்தரீயம். தவிர திருக் கோயில்களுக்கு சென்று திரும்பியவுடன் அன்னமிடுதலை சமாராதனம் என்பார்கள். சமாராதனைக்கு வந்தவர்களுக்கு உணவை பரிமாறிவிட்டு மிகுந்ததை ஆர்யாம்பாள் உண்டார். அப்பொழுது ஒரு தெய்வீக ஒளி தன் வயிற்றினுள் புகுந்ததாக உணர்ந்தார்.

கனவு மெய்யானது. ஆர்யாம்பாள் கருவுற்றார். பரமேஸ்வரன் ஆர்யாம்பாளுக்கு ஓர் உன்னத புத்ரனாக பிறந்தார். சநாதன தர்மத்தை நிலைநாட்ட வேண்டும் என்பதால் வேதாத்யனம் எங்கே சிரத்தையாக அத்யயனம் செய்யப்படுகிறதோ, வேதஞானம் எங்கே ப்ரகாசிக்கிறதோ, வேதக்குரல் எங்கே தெளிவாக ஒலிக்கிறதோ எங்கே வேதம் தர்மத்திற்கு ஆணிவேராக இருக்கிறதோ, அங்கே, காலடியில் சிவபெருமான் அவதாரம் செய்தார்.

### *15. ஸ்ரீ பரமேஸ்வரன் அவதரித்த தினம் என்ன? சங்கரர் என்னும் நாமத்தை எந்த அடிப்படையில் அவருக்கு சூட்டப்பட்டது?*

ஸ்ரீ பரமேஸ்வரன் ஸ்ரீ சங்கர பகவத் பாதராக அவதரித்த தினம் வைசாக மாசம், சுக்ல பக்ஷம், பஞ்சமி திதி. வைகாசி மாதங்களில் இரண்டாவது (2). பக்ஷங்களில் சுக்ல பக்ஷம் முதல் பக்ஷம் (1). திதிகளில் பஞ்சமி என்பது ஐந்தாவது திதி (5). எண்களுக்கு சில சங்கேத எழுத்துக்கள் உண்டு. அந்த முறைக்கு கபடயாதி சங்க்யை எனப்படும். சங்கரர் பிறந்த மாதம் பக்ஷம் திதி இந்த மூன்றையும் திருப்பிப் பார்த்தால் கிடைக்கும் எண் 5, 1, 2. ஆக கபடயாதி முறைப்படி எண் ஐந்திற்கு உண்டான எழுத்து 'சம்'. எண் ஒன்றிற்கு உண்டான எழுத்து 'க' என்பதாகும். எண் இரண்டிற்கு உண்டான எழுத்து 'ர்' என்பதாகிறது. ஆகவே திதி, பக்ஷம் மாதம் ஆகிய மூன்றையும் குறிக்கும் சங்கேதமாக 'சங்கர' எனப் பெயர் அமைந்தது. ஆக அதுவே ஸ்ரீ பகவத் பாதரின் திரு

நாமமாக சூட்டப்பட்டது. மேலும் அவர் அவதாரம் செய்த ஆண்டு 'நந்தன' என்றும், நக்ஷத்திரம் திருவாதிரை என்றும் சங்கர விஜயத்தில் சொல்லப்படுகிறது.

கேரளாவில் ஒரு சம்ப்ரதாயம். அங்குள்ள அரசர்கள் தாங்கள் பிறந்த நக்ஷத்திரத்தை 'திருநாளாக' தங்கள் பெயருடன் இணைத்துக் கொள்வார்கள். தவிர மற்றவர்கள் தாங்கள் பிறந்த நக்ஷத்திரத்திற்கு உண்டான ப்ரத்யேக எழுத்துக்களில் பெயர் தொடங்கும் வகையில் தங்கள் பெயரை வைத்துக் கொள்வார்கள். ஆனால் சங்கரருக்கு பிறந்த திதியை அடிப்படையாக கொண்ட பெயரே சூட்டப்பட்டது. 'சங்கர:' என்ற சொல்லுக்கு அனைவருக்கும் ஹிதத்தை செய்பவர் என்று பொருள்.

### *16. ஸ்ரீ சங்கரரின் சிறு வயது வாழ்க்கை எவ்வாறு அமைந்தது?*

'காம்யஸ்ய பஞ்சமே' என்பது ஸ்ருதி வாக்யம். அதற்கிணங்க சங்கரருக்கு அவரது ஐந்தாவது வயதில் உபநயனம் நடந்தது. உபநயனம் ஆன பிறகு எட்டாவது வயதிற்குள் வேத சாஸ்திரங்களை தகுந்த குருவிடம் கற்றுகொண்டார். வேதம் படிக்கும் சமயத்தில் குருகுல வாசமும் செய்தார்.

இந்த கால கட்டத்தில் சிவகுரு காலமானார். ஆர்யாம்பாளுக்கு சங்கரர் ஒருவர் தான் ஆதரவு என்றாகியது. இதை உணர்ந்த சங்கரர் அம்மாவுக்கு மிகவும் அனுசரணையாக இருந்தார். லோக க்ஷேமத்திற்காக பிறவி எடுத்த சங்கரர், லௌகீக வாழ்க்கையில் உழல விரும்பவில்லை. அதை தன் அம்மாவிடம் சொல்லவும் தயங்கினார். ஆனால் அதே சமயம் அம்மாவை அநாதரவாக விட்டு விட்டு செல்லும் எண்ணமும் அவருக்கு ஏற்படவில்லை.

### *17. 'யதீஸ்வரனாக அவதாரம் எடுக்கிறேன்' என்று தேவர்களிடம் சொல்லி விட்ட படியால் துறவறம் எப்படியும் எடுத்துக் கொள்ளத் தானே வேண்டும்? அப்படியிருக்க தாயின் பாசப் பிடிப்பில் மயங்கி, அம்மாவின் சம்மதத்தை சங்கரர் எதிர்ப்பார்த்து இருக்க வேண்டிய அவசியம் என்ன?*

சந்நியாசம் தாயார் சம்மதம் இல்லாமல் வாங்கி கொள்ளக் கூடாது என்பது சாஸ்திர நியதி. 'சர்வ வந்த்யேன யதிநா ப்ரஸுர்வந்த்யா ஹி ஸாதரம்' - சந்நியாசிக்கு எல்லோரும், அப்பா உட்பட, நமஸ்காரம் செய்ய வேண்டும். ஆனால் துறவியான போதும் பிள்ளை தான் தாயாருக்கு நமஸ்காரம் செய்ய வேண்டும். 'கடனே

என்று பண்ணினால் போதாது. 'ஸாதரம்' மரியாதையான அன்போடு நமஸ்கரிக்க வேண்டும். பெற்ற தாயார் அவ்வளவு உயர்ந்தவள். பத்து மாதம் சுமந்து பெற்ற தாயாருக்கு இணையான சக்தி எதுவும் கிடையாது. ஆக கண் கண்ட தெய்வம் தாயார் தான்.

### *18. சங்கரரின் தாயார் அவரிடம் என்ன வேண்டுமென்று கேட்டார்? அந்த சௌகரியத்தை சங்கரரால் செய்து கொடுக்க முடிந்ததா?*

அவர்கள் இல்லத்திற்கு சற்று தொலைவில் உள்ள சூர்ணா நதி (ஆலவாய் புழை) இருந்தது. அதில் ப்ரதி தினம் அவரது தாயார் ஸ்நானம் செய்வார். ஒரு சமயம் அவரது தாயாருக்கு உடல் நலம் சரியாக இல்லை. அவ்வளவு தூரம் சென்று நதியில் நீராடுவது சாத்தியப்படவில்லை. நதியில் ஸ்நானம் செய்யாமல் இருக்கவும் மனது ஒப்பவில்லை. அதனால் சங்கரரிடம் 'அவ்வளவு தூரம் சென்று நதியில் நீராட முடியவில்லை. நீ ஸ்நானம் செய்ய உதவி செய்யேன்' என்று கூறினார்.

தாயின் விருப்பத்தை நிறைவேற்ற சங்கரர் ஆசைப்பட்டார். நதியிடம், அதன் போக்கை தன் வீட்டுக்கு அருகாமையில் மாற்றிச் செல்ல வேண்டும் என வேண்டினார். சங்கரர் தெய்வாம்சம் கொண்டவர். நதியும் அவர் வேண்டுகோளுக்கு இணங்கி அவர்கள் வீட்டுக் கொல்லைப் புறமாக அந்த சூர்ணா நதி ஓடத் தொடங்கியது. தாயாரை அழைத்து சென்று நதியில் நீராட வைத்தார். தாயின் மனமும் குளிர்ந்தது.

### *19. துறவறம் மேற்கொண்டால் மறுபிறவி உண்டானது போல் கருதலாமா?*

சந்நியாசம் வாங்கிக் கொண்டால் வேறு ஜன்மம் உண்டானது போல் ஆகும். வித்யாரண்யர் என்னும் மஹான் தனது பூர்வாஸ்ரமத்தில் மஹாலக்ஷ்மியைக் குறித்து கடும் தவம் இருந்தார். அவர் தவத்தின் வலிமையைக் கண்டு, மஹாலக்ஷ்மியே ப்ரசன்னமானார். 'இந்த ஜன்மத்தில் எனது அநுக்ரஹம் உனக்கு ஏற்பட வாய்ப்பில்லையே' என்றார். உடனே அவர் துறவறம் மேற்கொண்டார். அடுத்த ஜன்மம் ஏற்பட்டது போலாயிற்று. மஹாலக்ஷ்மியின் அருள் கிட்ட எந்த தடையும் இல்லை. அபரிமிதமாக செல்வம் கிடைத்தது. அனைத்தையும் நல்ல காரியங்களுக்கு பயன் படுத்தினார்.

### *20. சங்கரரால் துறவறம் மேற்கொள்ள முடிந்ததா? எப்படி சாத்தியமாயிற்று?*

ஒரு சமயம் சங்கரர் தாயாரை ஸ்நானம் செய்துவிக்க நதிக்கரைக்கு சென்றார். தாயார் ஸ்நானம் செய்து முடித்து கரையேறியதும் தான் (சங்கரர்) நதியில் இறங்கி ஸ்நானம் செய்து கொண்டிருந்தார். திடீரென ஒரு முதலை அவரது காலை கவ்வியது. சங்கரர் முயற்சித்தும் அது விடுவதாக இல்லை. தன் அவதார நோக்கத்தை நிறைவேற்றிக்கொள்ள சந்தர்ப்பம் வந்து விட்டது என்பதை சங்கரர் உணர்ந்தார்.

உடனே அவர் தன் தாயாரை நோக்கி, 'அம்மா, என் காலை ஒரு முதலை கவ்விக் கொண்டிருக்கிறது. என்ன செய்தும் அது என்னை விடுவதாக இல்லை. முதலையால் நான் இறக்க வேண்டும் என்று ப்ராரப்த கர்மாவில் இருந்தால் அதை எப்படி மாற்ற முடியும் என்று சிந்திக்கிறேன். ஏனென்றால் சிறு வயதில் முதலையால் மரணம் ஏற்படுவது துர்மரணமாகக் கருதப்படும்.'

'ஒருவேளை நான் மனதளவிலாவது சந்நியாசம் வாங்கிக் கொண்டால் மறுபிறவி எடுத்தது போல ஆகிவிடும் அல்லவா? அப்பொழுது நான் முதலையால் இறக்க வேண்டும் என்னும் ப்ராரப்த விதியும் அந்த ஜன்மாவோடு போய் விடும். இது ஒன்று தான், இந்த முதலியிடமிருந்து நான் தப்பித்து பிழைத்துக்கொள்ள ஒரே வழி எனத் தோன்றுகிறது.'

'அம்மா, சந்நியாசம் தாயார் சம்மதம் இல்லாமல் வாங்கிக் கொள்ளக்கூடாது எனபது சாஸ்த்ர நியதி. நீ சம்மதித்தால் தான் நான் துறவறம் ஏற்றுக்கொள்ள முடியும். நான் பிழைத்தால் உனது பிள்ளை உயிரோடு இருக்கிறான் என்னும் நிம்மதி உன் மனதில் ஏற்படும். துர்மரணத்தில் பிள்ளையை இழப்பதைவிட சந்நியாசியான பிள்ளை பரவாயில்லை தானே!'

'மேலும் எனக்கு சந்நியாசத்தால் மோக்ஷம் கிடைக்கும். இருப்பதொரு தலைமுறை நமது முன்னோர்கள் நற்கதி அடைவர். உயிரோடு இருந்தால் தான் உனக்கு நான் க்ருத்தியம் செய்ய முடியும். பிள்ளை கையால் கிடைக்கும் க்ருத்தியம் நற்கதியை ஏற்படுத்துமே! சந்நியாசியாக நான் எங்கு சஞ்சாரம் செய்தாலும் உன் அந்திம காலத்தில் வந்து கட்டாயம் உன் அந்திம க்ரியைகளை செய்வேன்.' என தொடர்ந்து தாயிடம் விளக்கினார்.

அந்த தாய் மிகவும் திகைத்துப் போனாள். என்ன சொல்வதென்று மனதிலே குழப்பம். 'பஜனம்' செய்து இறைவன் அருளால் பெற்ற பிள்ளையை எப்படி துர்மரணத்தில் இழக்க முடியும்? 'சங்கரா, உனக்கு எது நல்லதென்று தோன்றுகிறதோ அதைச் செய்' என சம்மதம் தெரிவித்தார். ஸ்ரீ சங்கரர் நீரிலிருந்தபடியே மனதளவில் சந்நியாசம் ஏற்றுக் கொள்வதாக சங்கல்பம் செய்து கொண்டார். முதலையும் அவர் காலை விட்டது.

அப்பொழுது ஒரு கந்தர்வன் வெளிப்பட்டு வந்தான். ஸ்ரீ சங்கரரின் காலில் விழுந்து வணங்கினான்.

***21. கந்தர்வர்கள் என்பவர்கள் யார்? அவன் சங்கரரின் காலில் விழுந்து எதற்காக வணங்க வேண்டும்?***

கந்தர்வர்கள் என்பவர்கள் அதிசய பார்வை - திவ்ய சக்ஷுஸ் - பெற்றவர்கள். இருட்டிலும் நம்மால் பார்க்க முடியாத பொருள்களை கூட அவர்களால் காணமுடியும். கந்தர்வர்கள் எப்பொழுதும் சங்கீதம் இசைத்துக் கொண்டும் மது அருந்திக் கொண்டும் மகிழ்ச்சியாக இருப்பார்கள். வாத்திய இசை, வாய்பாட்டு இரண்டிலும் சிறந்தவர்கள். அதனால் தான் இசையை காந்தர்வ வேதம் என்று சொல்லப்படுகிறது.

காலில் விழுந்து வணங்கிய கந்தர்வன் சங்கரரிடம் சொன்னான். 'நான் ஒரு கந்தர்வன். சங்கீத இசையை ரசித்துக் கொண்டும் மது அருந்திக் கொண்டும் மெய்மறந்து கந்தர்வ லோகத்தில் விழுந்துக் கிடந்தேன். அந்த சமயத்தில் துர்வாச முனி கந்தர்வ லோகம் வந்தார். அவர் வந்தது தெரியாததால் எழுந்து வணங்காமல் இருந்தேன். அவர் கோபித்துக் கொண்டு விட்டார். 'நீ முதலையாக பூலோகத்தில் பிறப்பாய்' என சாபமும் கொடுத்து விட்டார். அவர் காலை வணங்கி சாப விமோசனம் என்ன என்று கேட்டேன். பரமேஸ்வரன் பூலோகத்தில் அவதாரம் செய்யப் போகிறார். அவர் காலை நீ பிடித்ததும் உனக்கு சாப விமோசனம் கிடைக்கும் என்றார். அதற்காக சூர்ணா நதியில் வாசம் செய்யவும் சொன்னார். எனக்கு சாப விமோசனம் அளித்த உங்களை வணங்குகிறேன்.'

பிறகு சங்கரரிடம் உத்தரவு பெற்றுக் கொண்டு கந்தர்வன் தன் இடத்திற்கு திரும்பி சென்றான்.

***22. சங்கரர் பிழைத்துக் கொண்டார் என அறிந்தவுடன் அவரது அன்னையின் மனநிலை எவ்வாறு இருந்தது? அவரது***

***அன்னை ஆசைப்பட்டது என்ன? சங்கரர் அவரை அன்னையை எவ்வாறு சமாதானப்படுத்தினார்?***

ஸ்ரீ சங்கரர் ஆபத் - சந்நியாசம் வாங்கி கொண்டவுடன் முதலை அவரது காலை விட்டு விட்டது. 'தன் பிள்ளை பிழைத்து விட்டான்' என தெரிந்ததும் அந்த அன்னை மிகவும் சந்தோஷமடைந்தார். உடனே அவருக்கு லௌகீக வாழ்க்கை அமைத்து கொடுக்க வேண்டும் என்ற எண்ணம் அந்த அன்னைக்கு மேலிட்டது. சங்கரருக்கு திருமணம் செய்து வைத்துவிட வேண்டும் என்று அந்த அன்னை விரும்பினார்.

தாயின் இந்த வேண்டுதலைக் கேட்ட சங்கரர் திடுக்கிட்டார். சங்கரர் துறவறம் மேற்கொள்ள அநுமதி கொடுத்ததை, அந்த அன்னை மறந்து விட்டார் போலும். சங்கரர் தான் சந்நியாசம் வாங்கி கொண்டதை அன்னைக்கு ஞாபகப்படுத்தி விட்டு, இனி அவர் போக்கில் அவரை அவரது அன்னை விட்டுவிட வேண்டும் எனபதையும் வலியுறுத்தினார்.

'பிக்ஷாப்ரதா ஜனன்ய: பிதரோ குரவ: குமாரகா: சிஷ்யா:
ஏகாந்தரமணஹேது: சாந்திர்தயிதா விரக்தஸ்ய !!
(நீதி வைராக்ய சதகம்)

'அம்மா, இனி எனக்கு பிக்ஷை இடுபவர்கள் எல்லாம் எனது அம்மாக்கள். எனக்கு ஞானோபதேசம் செய்பவர்கள் எல்லாம் எனது பிதாக்கள். என்னிடம் பாடம் சொல்லிக் கொள்ளும் சிஷ்யர்கள் எல்லோரும் என் பிள்ளைகள். இப்படி எனக்கு ஒரு பெரிய குடும்பம் உண்டாகப் போகிறது. என் ஞான குருவைத் தேடி நான் செல்ல வேண்டும். எனக்கு விடை கொடுங்கள் தாயே' என வேண்டினார்.

'நான் எங்கு சஞ்சாரம் செய்தாலும் நீங்கள் நினைக்கும் நேரத்தில் வந்து விடுவேன். கட்டாயம் உங்கள் அந்திம க்ருத்தியத்தை செய்வேன்.இதை மட்டும் நான் உறுதியாக சொல்கிறேன்.' என்று சொல்லி, அன்னையை நமஸ்காரம் செய்து விட்டு தன் ஞான குருவைத் தேடி தனது பயணத்தைத் சங்கரர் தொடங்கினார்.

***23. சங்கரர் தன் பயணத்தின்போது பிக்ஷை எடுத்து உண்டு வந்தார். அப்பொழுது அங்கு என்ன விசேஷம் நடந்தது?***

அன்னையிடமிருந்து விடைப்பெற்று கொண்டு சங்கரர் தனது குருவை தேடி தனது பயணத்தை வடக்கு திக்கை (வடஇந்தியா)

நோக்கி மேற்கொண்டார். குரு முகமாக தனது சந்நியாச தீக்ஷை அமைந்திட வேண்டும் என்பதிலும் குறியாக இருந்தார். வெகு தூரப் பயணம் என்பதால் தான் கடைப்பிடித்து வரும் ப்ரஹ்மசர்ய ஆஸ்ரம முறைப்படி பிக்ஷை எடுத்து தினம் ஆஹாரத்தை முடித்துக் கொண்டார்.

ப்ரஹ்ம தேஜஸ"டன் தெய்வீக களையுடன் அவர் பிக்ஷை கேட்கும் போது எல்லா தாய்மார்களும் அவருக்கு அன்னமிடுவது தங்களது பிறவிப் பயன் என்று எண்ணினர். ஒவ்வொரு நாளும் அன்றாட தேவை அளவே சங்கரர் பெற்றுக் கொள்வார். ஒரு நாள் த்வாதசி. அதற்கு முந்தைய நாள் ஏகாதசி என்பதால் நியமமாக சுத்த விரதம் இருந்தார். ஒரு வீட்டிற்கு சங்கரர் பிக்ஷைக்கு போனார். ஆனால் அந்த வீட்டுக்காரர் பரம தரித்திரர். மிகவும் கஷ்டமான ஜீவனம். பக்திமானான அந்த வீட்டுக்காரரே தினம் உஞ்ச வ்ருத்தி செய்தே தனது குடும்பத்தை காப்பாற்றி வந்தார். அவர் வெளியே சென்றிருந்த படியால் அவரது மனைவி மட்டும் வீட்டிலிருந்தார். சங்கரர் பிக்ஷை கேட்டு குரல் கொடுத்தார். வீட்டின் உள்புறமிருந்து வெளியே வந்த இல்லத்தரசி தெய்வீக ஒளியுடன் கூடிய பாலகனைப் பார்த்து ப்ரமித்து விட்டாள். இப்படிப்பட்ட குழந்தை ப்ரஹ்மசாரிக்கு பிக்ஷை இட தன்னிடம் ஒன்றும் இல்லையே என வேதனை அடைந்தாள். தனது ஏழ்மை நிலையைக் எண்ணி தன்னையே நொந்து கொண்டு, கண் கலங்கினாள்.

வீட்டினுள் வந்து அந்த பெண்மணி தேடியதில் சற்று வெம்பிப் போன நெல்லி காய் ஒன்று தான் கிடைத்தது. அதுவும் அதை த்வாதசி பாரணைக்காக (த்வாதசி அன்று நெல்லிக்காய் சேர்த்துக் கொள்வது ஸ்லாக்கியமானது என்று ஒரு ஸம்ப்ரதாயம் இருக்கிறது) அதனால் அந்தக் கனியை அவரின் கணவர் பத்திரப்படுத்தி வைத்திருந்தார். வேறு ஒன்றும் இல்லயே என்று மிகுந்த மன வருத்தத்துடன் சங்கரரின் பிக்ஷா பாத்திரத்தில் அந்தக் கனியைப் போட்டாள்.

அந்தப் பெண்மணி தனது தரித்திர நிலையை வெளிக் காட்டிக் கொள்ளவில்லை. தங்கள் இயலாமையைச் சொல்லி அநுதாபம் பெறவும் முயற்சிக்கவில்லை. தங்களுக்கு தேவையானது எதுவோ அதை அவள் வணங்கும் இறைவன் அளிப்பான் என அசையாத நம்பிக்கை கொண்டிருந்தாள். பக்தி செலுத்துவது அவள் வேலை,

தகுந்த நேரத்தில் அருளுவது என்பது இறைவனின் செயல் என தீர்மானமாக இருந்தாள்.

சங்கரர் கருணை உள்ளத்துடன் மஹாலக்ஷ்மியை உத்தேசித்து 'கனகதாராஸ்தவம்' என்னும் ஸ்தோத்ரத்தைப் பாடினார். அப்பொழுது ஒரு அசிரீரி,' இந்த தம்பதியர் நிறைய பாவங்களை பூர்வ ஜன்மங்களில் செய்திருக்கிறார்கள். அதனால் இவர்களது வறுமை நிலையை மாற்ற முடியாது. அவர்கள் இந்த ஜன்மத்தில் கடவுள் பக்தி கொண்டு சீலர்களாக வாழ்ந்து அவர்களது பாவத்தை போக்கிக் கொள்ள வேண்டும்' என்றது.

'அந்த பெண்மணி மிகுந்த வறுமை நிலையில் இருக்கிறாள். இருந்தும் தனக்கென்று வைத்துக் கொள்ளாமல் வீட்டில் இருந்த ஒரே பொருளையும் எனக்கு தந்து விட்டாள். இந்த ஒரு செயல் அவர்கள் பாபங்களிலிருந்து விடுபட போதாதா' என அந்த பெண்மணிக்காக சங்கரர் நியாயம் கேட்டார். சங்கரரின் சொற்களை கேட்டு சந்தோஷப்பட்டு மஹாலக்ஷ்மி அந்த வீடு நிறைய பொன்னால் ஆன நெல்லிக்கனியாக பொழிய வைத்தாள். அந்த ஸ்துதியை இன்றும் பக்தியோடும் நம்பிக்கையொடும் பலரும் சொல்லி பலன் அடைகின்றனர்.

இவ்வாறு பொன் மழையினால் பெருமை பெற்ற வீடு இன்றும் 'ஸ்வர்ணத்து மனை' என்ற பெயரினால் அழைக்கப்படுகிறது. நெல்லிக் கனியாக பொன் மழை பெற்ற கிராமம் 'பழந்தோட்டம்' என்னும் பெயருடன் விளங்குகிறது.

### *24. சங்கரருக்கு தகுந்த குரு கிடைத்தாரா? அவரை எங்கே சந்தித்தார்?*

நர்மதை நதிக் கரையில் ஒரு குகையில் சங்கரர் தனது குருவைக் கண்டார். ஓங்காரேஸ்வரர் என்று பெயர் கொண்டு சிவபெருமான் ஜ்யோதிர் லிங்கமாக குடிகொண்டிருக்கும் அந்தப் புனித ஸ்தலத்திற்கு அருகாமையில் அந்த குகை அமைந்திருந்தது. சங்கரர் செல்லும் போது அந்த குரு நிஷ்டையில் இருந்தார். நிஷ்டை கலைந்தவுடன் வந்திருக்கும் சங்கரரை 'நீ யார்' எனக் கேட்டார். சங்கரர் பணிவுடன் நமஸ்கரித்துவிட்டு பத்து ஸ்லோகங்களில் தம்மை அறிமுகப்படுத்திக் கொண்டார். அந்த ஸ்லோகங்களுக்கு தசஸ்லோகி என்று பெயர். 'ஐயா, நான் நிலமோ, நீரோ, தேஜஸோ, வாயுவோ, ஆகாசமோ, புலன்களோ, பஞ்ச பூதங்களொ அல்ல. நேதி நேதி என்று

ஒவ்வொன்றாக விலக்கி எஞ்சி நிற்கும் பொருளான சிவமே நான்' என்று தன்னைப் பற்றி சொல்லிக் கொண்டார்.

குரு கோவிந்த பாதர் மிகுந்த சந்தோஷமடைந்தார். சங்கரர் விரும்பிய படி கிரமப்படி சந்நியாசத்தை கோவிந்த பகவத் பாதர் அளித்தார். சித் விலாஸ சங்கர விஜயத்தில் சங்கரர் தனது குருவை பதரிகாஸ்ரமத்தில் சந்தித்தாக காண்கிறது.

***25. சங்கரர் சிவபெருமான் அவதாரமல்லவா? 'ஈஸ்வர சர்வ வித்யானாம்' என்று சொல்லப்படுகிறது. ஞான ஸ்வருபியான சிவன் தக்ஷிணாமூர்த்தி ரூபத்தில் சின் முத்திரை மூலம் மௌனமாக இருந்த போதிலும் சனகாதி முனிவர்களுக்கு உபதேசித்ததாகவும் காண்கிறது. அப்படியிருக்கும் போது வேறொரு குருவைத் சங்கரர் தேடி அலைவானேன்?***

தர்மத்தை அநுஷ்டிப்பவர்களுக்கு முன்று குருக்கள் உண்டு என்று முதலில் பார்த்தோம். அப்படி மூன்றாவதாக சொல்லப்படுபவரே மற்ற இருவரைவிட மேன்மையானவர் என்றும் பார்த்தோம். ஏனென்றால் இந்த குரு 'ஞான தாதா.' கடைத்தேற வழியைக் காட்டுபவர். பவ சாகரத்திலிருந்து விடுபட்டு மோக்ஷ சாம்ராஜ்யத்தை அடைவதற்கு தக்க தோணி. குருவின் அநுக்ரஹம் இல்லாமல் என்ன பாடு பட்டாலும் ஞானம் ஏற்படாது. குருவின் பரிபூரண அநுக்ரஹம் உள்ளே சென்றால் தான் தத்துவங்களை புரிந்துக்கொண்டு ஞானம் பெற முடியும்.

சங்கரர் மானிட அவதாரம் எடுத்தபின், அனைத்தையும் ஒரு மானிடன் போல், தனது ஈஸ்வராம்சத்தை ப்ரகடனப்படுத்தாமல், செய்கிறார். அவதார நோக்கமே சன்மார்க்கத்தை காட்டி, ஸனாதன தர்மத்தை நிலை நாட்டுவதே. குருவின் மஹிமையை உலகிற்கு உணர்த்த, அவர் சிறந்த முன் உதாரணமாக நமக்கு நடந்து காட்டுகிறார்.

சரீரம் ஸ்வருபம் ததா வா களத்ரம்
யசச்சாரு சித்ரம் தனம் மேரு துல்யம் !
மனச்சேந்நலக்னம் குரோங்க்ரி பத்மே
தத: கிம், தத: கிம், தத: கிம், தத: கிம், !!

என ஆரம்பித்து எட்டு ஸ்லோகங்களை (குர்வஷ்டகம்) இயற்றி குருவின் பாதக் கமலங்களின் பெருமையை அனைவரும் அறிய சொல்லியிருக்கிறார்.

குருவின் பெருமையைப் பற்றி ஸ்ரீ ஹர்ஷர் சொல்வதையும் பார்ப்போம். புண்ய ஸ்லோகியான நள மஹாராஜனின் சரித்திரத்தை நைடதம் என்னும் திவ்ய காவியமாக ஸ்ரீஹர்ஷர் படைத்தார். சிந்தாமணி மந்திர சித்தியினால் அந்த காவியத்தில் அற்புத சொல் ப்ரயோகங்களையும் கடினமான பதங்களையும் கையாண்டு ஆழ்ந்து படித்தால் தான் புரியும் என்பதான முடிச்சுகளையும் அதில் அவர் வைத்திருக்கிறார். 'நைஷதம் வித்வத் ஔஷதம்' என்று உயர்வாக அறிஞர்கள் சொல்வார்கள். அவர் தனது காவியத்திலேயே காணும் (க்ரந்தி) முடிச்சுகளைக் குறிப்பிட்டு. 'சிரத்தை இருந்தால் தகுந்த குருவைத் தேடி அவற்றை புரிந்துக் கொள்ள வேண்டும். குருவைத் தேடி அவரை வணங்கி அவர் கொடுக்கும் விளக்கங்களால் அந்த காவிய அமுதத்தை பருக வேண்டும். அஹங்காரம், மமதை கொண்டவர்களால் இதை புரிந்துக்கொள்ளவே முடியாது. சாதுவாக இருந்து குருவுக்கு கைங்கர்யம் செய்து விளக்கம் பெற வேண்டும்' எனச் சொல்லியிருக்கிறார்.

ஆகவே, ஐயமில்லாமல் நாம் தெரிந்துகொள்ள வேண்டியது குருவிடம் பக்தி செலுத்தி, அநுக்ரஹம் பெறுவது மிகவும் அவசியமானது.

### *26. சங்கரரின் எந்த செய்கையால் கோவிந்த பகவத் பாதருக்கு வ்யாசர் சொன்ன என்ன அறிவுரை ஞாபகத்திற்கு வந்தது? வியாசர் இட்ட கட்டளை என்ன?*

ஒரு நாள் திடீரேன நர்மதை கரை புரண்டு ஓடியது. வெள்ளப் பெருக்கில் இருந்து காக்கவும், தனது குருவின் நிஷ்டைக் கலையாமல் இருக்கவும், சங்கரர் 'ஜலாகர்ஷண' மந்திரத்தை ஜபித்தார். தன் கையிலுள்ள கமண்டுலுவை நீர் ஓடி வரும் திசைக்கு எதிர்புறமாக பிடித்தார். வெள்ள நீர் முழுவதும் அவரது கமண்டுலுவை அடைந்தது. வெள்ளப் பெருக்கினால் எந்தவித குந்தகமும் ஏற்படவில்லை.

குரு தனது த்யானத்தை முடித்துக் கொண்டு, நிஷ்டை கலைந்து, கண் விழித்தார். என்ன நிகழ்ந்தது என்பதை சங்கரர் மூலம் அறிந்தார். தன் சிஷ்யனின் செயலைக் கண்டு சந்தோஷித்து பெருமிதம் கொண்டார். அப்பொழுது தான் வ்யாசர் சொன்னது ஞாபகத்திற்கு வந்தது.

பிறகு குரு கோவிந்த பகவத பாதர் சங்கரரிடம், 'அப்பா! வியாச பகவான் சொன்னதை சொல்கிறேன். கேள்! சகல சாஸ்த்ரங்களையும் கற்பதற்கான ஒரு நல்ல சிஷ்யன் பிறிதொரு சமயம் உன்னிடம் வருவான். அவன் தன் சக்தியால் நர்மதா நதியின் வெள்ள நீரை தனது கமண்டலத்தில் அடக்கி விடுவான். என்னுடைய ப்ரஹ்ம சூத்ரத்திற்கு அவனை விளக்க உரை எழுதச் செய்து, அவன் மூலம் லோகத்தில் அத்வைதத்தை பலரும் அறிய செய்.' என்றார். அதனால், 'நீ காசி க்ஷேத்ரம் செல்ல வேண்டும். வியாசர் அருளிய ப்ரஹ்ம சூத்ரத்திற்கு பாஷ்யம் எழுத வேண்டும்' என்று கோவிந்த பாதர் பணித்தார்.

### *27. குருவின் கட்டளைப்படி சங்கரர் உடனே காசி சென்றாரா? காசி க்ஷேத்ர விசேஷங்கள் என்ன?*

சங்கரர் தனது குருவின் கட்டளைப்படி காசி க்ஷேத்ரத்தை அடைந்தார். அவருக்கு அப்பொழுது வயது பன்னிரண்டு. சப்த மோக்ஷ புரிகளில் முதன்மையானது காசி. புனித ஜீவ நதியான கங்கை கரையில் அமைந்திருக்கும் நகரம். காசியில் மரணம் அடைபவர்களின் காதில் தாரக மந்திரத்தை சிவபெருமான் உபதேசித்து அவர்களுக்கு மோக்ஷம் சித்திக்க செய்கிறார் என ஹிந்துக்களால் நம்பப்படுகிறது.

காசியில் சக்தி வாய்ந்த ஐந்து தீர்த்த கட்டங்கள் உள்ளன. இந்த ஐந்து தீர்த்தங்களில் ஸ்நானம் செய்பவன் பஞ்ச பூதங்களால் ஆன இந்த சரீரத்தை மறுபடியும் பெற மாட்டான் என்றும் சிவனோடு ஐக்கியமாகி விடுவான் எனறும் நம்பப்படுகிறது.

### *28. காசி க்ஷேத்ரத்தில் சங்கரர் செய்த வைபவங்கள் என்ன?*

குருவின் கட்டளைப்படி ப்ரஹ்ம சூத்திரத்திற்கு பாஷ்யம் எழுதினார். கங்கை கரையிலிருந்து அத்வைத கருத்துக்களை தெளிவான சிந்தனையோடு எளிய முறையில் அனைவரும் புரிந்து கொள்ளுமாறு தொடர்ந்து மணிகர்ணிகா ஸ்நான கட்டத்திலிருந்து உபதேசித்தார். அறிஞர்கள் அனைவரும் அவரது அறிவு சார்ந்த சொற்பொழிவை கேட்க அனைத்து திசைகளிலிருந்து வந்த வண்ணமாக இருந்தனர்.

சங்கரர் மணிகர்ணிகா கட்டத்தின் மேன்மையை ஒரு அஷ்டகம் மூலம் தெரிவிக்கிறார், 'கங்கை நதியில் இந்தக் கட்டத்தில் ஸ்நானம் செய்பவர்கள், தங்கள் பாபங்கள் அனைத்தையும் தொலைத்தவர்

களாய், திரும்பி ஜனனம் செய்ய வேண்டிய அவசியமில்லாதவர் களாய், நேரடியாக ஸாயுஜ்ய பதவி அடைகிறார்கள்' என சங்கரர் ஸ்லாகிக்கிறார்.

திருமால் திருவாய் மலர்ந்து அருளிய பகவத் கீதைக்கு பாஷ்யம் எழுதினார். மேலும், 'ஈச - கேன - கட - ப்ரச்ன - முண்ட - மாண்டுக்ய - தித்திரி - ஐதரேயம் ச சாந்தோக்யம் ப்ருஹதாரண்யகம் தச'' என்னும் தசோபனிஷத்துகளுக்கு இதே வரிசைக் க்ரமத்தில் ஆசார்யாள் பாஷ்யம் பண்ணினார்.

காசி க்ஷேத்ரத்தில் அருள்பாலித்து கொண்டிருக்கும் விஸ்வநாதரை 'வேத ஸார சிவ ஸ்தோத்ரம்' செய்து சிவனின் மஹிமையை விளங்க செய்கிறார். கருணைக் கடலான சிவ பெருமானிடம், ஸம்ஸார துக்க கஹனாத் ஜகதீச ரக்ஷ (ஹே ஜகதீசனே! என்னை வாட்டும் இந்த ஸம்ஸார தீயின் தொல்லையி லிருந்து விடுவித்து காப்பாற்று') என சிவ நாமாஷ்டகத்தில் இறைஞ்சுகிறார்.

ஹிந்துக்கள் அனைவரும் வணங்கும் ஜீவநதி கங்கை. பகீரதனின் ப்ரயத்தனத்தால், வானிலிருந்து சிவபெருமானின் ஜடாமுடியில் கீழே விழ, அவர் அந்த கங்கையைத் தாங்கி, அந்த புண்ணிய நதி பூலோகத்தில் ஓட வழி வகுத்தார். ஸ்நானம் செய்பவர் பாபங்களை கங்கை போக்கி விடுகிறது. மரணத் தருவாயிலிருப்பவர்கள் சிறிதளவே கங்கை நீரை அருந்திய போதும் வைகுந்தப் ப்ராப்தி ஏற்படும் என்று நம்பப்படுகிறது. கங்கைக் கரையிலிருக்கும் காசியில் தன் சரீரத்தை விடுபவர்கள் மோக்ஷம் அடைகிறார்கள். கங்கையின் உயர்வுகளை ஸ்துதிகளாக்கி கங்காஷ்டகம் ஒன்றும் சங்கரர் இயற்றினார்.

காசியில் உள்ள கால பைரவரை அந்த ஊரின் தலைவராகக் கருதி வணங்குகிறேன் என் காலபைரவாஷ்டகத்தில் சொல்கிறார். பல ஸ்ருதியில் கால பைரவாஷ்டகத்தை பாராயணம் செய்பவர்கள் ஞானம் பெற்று முக்தி அடைவார்கள் என உறுதியாக சொல்கிறார்.

### *29. 'காலம் இறுதியாக நெருங்கும் போது எது ஒருவரைக் காப்பாற்றும்? மற்றும் எது காப்பாற்றாது' என்று சங்கரர் உபதேசித்தார்?*

ஒரு சமயம் சங்கரர் காசியின் வீதி வழியாக சென்று கொண்டிருக்கையில் ஒருவர் மிகவும் ப்ரயாசைப்பட்டு 'டுக்ருங்கரணே'

என்னும் இலக்கணச் சொல்லை மனப்பாடம் செய்து கொண்டிருந்தார். கருணை உள்ளத்தோடு அவருக்கு சங்கரர் இந்த இலக்கணச் சொல் காலன் நம்மை தேடி வரும் போது உபயோகப் படாது. கோவிந்தன் நாமம் ஒன்றே பலனளிக்கும்' என்று சொல்லி ஞானத்தை தரும் செய்திகளைக் கொண்டு ஒரு உபதேச துதியை இயற்றினார். முக்கியமாக 'பஜ, கோவிந்தம்' என்று நல்வழி காட்டினார்.

கோவிந்த நாமம் என்பது மிகவும் நமக்கு ஸ்வாதீனமானது போல தெரிகிறது. பாற்கடலில் பள்ளிக் கொண்டிருக்கும் ஸ்ரீ மஹா விஷ்ணுவை விட, சாதாரண பட்டவராகப் பசுக்களை காக்கும் இடையனாக சொல்லும் போது நம்மில் ஒருவர் போன்று இருக்கிறது. 'சர்வம் விஷ்ணு மயம் ஜகத் - ஸ்ரீ கோவிந்த கோவிந்த கோவிந்த' - லோகமனைத்தும் விஷ்ணுவே! கோவிந்தா என்கிறோம். அவர் எங்கும் எதிலும் நிறைந்தவர் என்பதால் கோவிந்த நாமத்தை சொல்லி சங்கல்பம் செய்து கொள்கிறோம். தவிர ஆசமனத்திலும் வழக்கமாக சொல்வதால் நமக்கு மிகவும் பரிச்சயமான நாமாவாகவும் இருக்கிறது. 'அச்சுதானந்தகோவிந்த நாமோச்சாரண பேஷஜாத் நஸ்யந்தி சகல ரோகா:' என்று பரம ஔஷதமாகவும் சொல்லப் படுகிறது. சிரமத்தைப் பொருட்படுத்தாமல் பக்தி மேலீட்டால், திருப்பதி மலையை ஏறும் போது அந்த பக்தர்களுக்கு சக்தியை கொடுப்பது அந்த 'கோவிந்த' நாமம் தான். அவன் நாமத்தை பாடும் சத்சங்க பஜனைகளில் கோவிந்த நாம சங்கீர்த்தனம் என்பது பக்தர்களது கவனத்தை இறைவனிடம் ஒன்று படுத்துகிறது.

ஆதியில் 'க்ருஷ்ணம் வந்தே 'ஜகத்குரும்' என்று கீதாச்சாரியனை துதிப்பது வழக்கமாயிற்று. பிறகு நமது ஆச்சாரியாளை 'ஜகத்குரு' என்று அவரது அரிதான அவரது புத்தி வைபவத்தையும் செயற்கரிய செயல்களின் ப்ரபாவத்தையும் வியந்து சொல்கிறோம். அப்படிப்பட்ட ஆச்சாரியாள் தன் குருவின் கோவிந்த நாமமே உயர்வானது என்று சொல்லி குருவின் மஹிமையை நமக்கு புரிய வைக்கிறார். விவேக சூடாமணியின் ஆரம்ப ஸ்லோகத்தில் 'கோவிந்தம் பரமானந்தம் ஸத்குரும் ப்ரணதோஸ்ம்யஹம்' என்று சொல்லியிருக்கிறார்.

ஆகவே அருமருந்தான கோவிந்த நாமம் பரமானந்தமானது.

***30. பரமசிவன் ஒருவர் தான் பிக்ஷாடனராக வந்து பிக்ஷை எடுக்க தயங்கியதில்லை. அருகில் இருக்கும் அன்னபூரணி இடும் பிக்ஷையை சந்தோஷத்துடன் பெற்றுக் கொள்வார்.***

***அதனாலோ என்னவோ அவரது அவதாரமான சங்கரரும் அன்னபூரணியிடம் பிஷை கேட்கிறார். இவர் 'தேஹி' என்று கேட்கும் பிக்ஷை என்ன?***

பதினாறு சக்தி பீடங்களில் ஒன்று என்று காசியில் உள்ள அன்னபூர்ணேஸ்வரிக்கு தனிச்சிறப்பு உண்டு. அந்த விசாலாக்ஷி தனது கருணா கடாக்ஷத்தால் லோகத்தை காப்பாற்றி வருகிறாள்.

அந்த தேவதையை எல்லோரும் துதித்து நற்பயன்களை அடைய வேண்டும் என்னும் விசால நோக்கத்தோடு 'அம்பிகையின் பேரில் அன்னபூர்ணாஷ்டகம்' என்று எட்டு ஸ்லோகங்களை சங்கரர் இயற்றியுள்ளார். ஒவ்வொரு ஸ்லோகத்தின் முடிவிலும், 'காசி நகரத்தில் அருள்பாலிப்பவளே! பக்தர்களுக்கு ஊன்றுகோலை தருபவளே பிக்ஷை இடு' என வேண்டுகிறார். ஆச்சாரியாளுக்கு தேஹாபிமானம் கிடையாது. அதனால் 'அன்னம் இடு' என்று பொதுவாக மற்றவர்களுக்காக இயற்றிய துதியாகும்.

இதில் முக்கியமாக கவனிக்க வேண்டியது என்னவென்றால் அன்னையின் சரீரமே ஞானமயமானது. அவள் மந்த்ர மாத்ருகா ரூபிணி. ஆதி க்ஷாந்த சமஸ்த வர்ணனகரி. அதனால் சரீரத்தை வளர்க்கும் அன்னம் மட்டுமின்றி அறிவை வளர்க்கும் பிக்ஷையைப் போட்டு ஞானத்தைக் கொடு' என்று கடைசியில் கேட்க உபதேசிக்கிறார்.

***31. உயர்ந்த சிவ க்ஷேத்ரமான காசியில் சங்கரருக்கு சிவ பெருமான் தரிசனம் தந்தாரா? சிவ பெருமான் திருவிளையாடல் செய்பவர் ஆயிற்றே, ஏதேனும் சோதனை வைத்தாரா?***

காஞ்சி மஹா பெரியவர் அவர்கள் அருளியது.- 'ஒருநாள் சங்கரர் கங்கையில் நீராடிவிட்டு சீடர்கள் புடை சூழ விஸ்வநாதர் ஆலயத்திற்குச் சென்று கொண்டிருந்தார். அப்போது ஒரு புலையனும் புலைச்சியும் நம்முடைய ஆசாரியர் போகிற வழியில் குறுக்கே வந்து விட்டார்கள். போதாத குறைக்கு கையில் நான்கு நாய்களை வேறு அந்த புலையன் பிடித்திருந்தான். சங்கரரின் உடன் வந்த சிஷ்யர்கள்! 'போ, போ! விலகிப்போ! எட்டிப்போ' என்று கூவினர்.'

'அன்னமயாத் அன்னமயம் அதவா சைதன்யமேவ சைதன்யாத் !
த்விஜவர தூரிகர்த்தும் வாஞ்சஸி கிம் ப்ரூஹி கச்ச கச்சேதி !!

புலையன் சிரித்தான்! 'அத்வைதம் அத்வைதம்' என்று சொல்லிவிட்டு என்னை விலகிப்போகச் சொல்கிறீர்களே, இது பெரிய முரண்பாடு இல்லையா? எல்லாமே ஒரே சத்தியமான கடவுளின் தோற்றம் தான் என்கிறது உங்கள் அத்வைதம். அவ்வாறெனில் உங்களைப் போலவே நாங்களும் அதே சத்தியத்தின் தோற்றம் தான். உடல் நமக்கு வேறு வேறானாலும், உடலுக்குள்ளே இருக்கிற பரமாத்மா ஒன்று தான். இந்த உடம்பைப் பற்றிய எண்ணத்தையே விலக்கி விட்டுப் பரமாத்மாவாக இருக்க வேண்டும் என்று தானே உங்களின் இந்த ஆசிரியர் உபதேசிக்கிறார்?

'அப்படியிருக்க, உங்கள் உடம்பின் அருகிலிருந்து எங்கள் உடம்பு விலகிப் போக வேண்டும் என்று சொல்வதில் பொருள் இல்லை. உங்கள் உடம்புக்குள் உள்ள ஞான ஒளியிலிருந்து எங்கள் உடம்பிலுள்ள ஞான ஒளி விலக வேண்டும் என்று நீங்கள் கருதினால் அதுவும் அர்த்த மற்றதாகும். ஏனெனில் இந்த ஞான ஒளிகள் அனைத்தும் ஒன்றேதான். தன்னை விட்டே தான் எப்படி விலக முடியும்? என்று இப்படி ஆணித்தரமாகக் கேட்டு விட்டான் அந்தப் புலையன்.

'ஜாக்ரஸ்வப்னசுஷுப்திஷு ஸ்புடதரா யா சம்விதுஜ்ஜ்ரும்பதே !
யா ப்ரஹ்மாதிபிபீலிகாந்ததநுஷு ப்ரோதா ஜகத்சாக்ஷிணீ !!

உடனே சத்தியத்தை தலையால் வணங்கும் ஸ்ரீ சங்கரர் இப்பேர்பட்ட (ப்ரதிபிம்ப வாதம், மற்றும் அவசின்ன அல்லது அவச்சேத வாதம் அறிந்த) ஞான நிலையை அடைந்து பேசுபவர் புலையனாக இருக்க முடியாது. காசிவிஸ்வநாதரும் விசாலாட்சியுமே தம்மை சோதிக்க வந்துள்ளனர் என்பதை ஞான திருஷ்டியில் உணர்ந்து 'மனீஷா பஞ்சகம்' என்ற ஐந்து சுலோகங்களைப் பாடினார். உடனே புலையன் நின்ற இடத்தில் விஸ்வநாதப் பெருமானே நின்றார்; புலைச்சி விசாலாட்சியானாள். நான்கு நாய்களும் நான்கு வேதமாயின.'

'என் மறு உருவே ஆன சங்கரா! வாய் பேச்சில் மட்டும் வேதாந்தம் கூறாமல் வாழ்விலேயே நீ நடத்திக் காட்டுபவன் என்று உலகறியவே இந்த நாடகம் செய்தேன்' என்று கூறி ஆசி வழங்கி மறைந்தார் இறைவன்.

***32. சங்கரர் செய்த ப்ரஸ்தான த்ரயபாஷ்யம் (உபனிஷத் (ஸ்ருதி), பகவத் கீதை (ஸ்ம்ருதி), ப்ரஹ்ம சூத்ரம் (ந்யாய***

*ப்ரஸ்தானங்கள்) பற்றி அவருடன் எதிர்வாதம் செய்த ப்ராஹ்மணக் கிழவர் யார்? கடைசியில் வாதத்தில் வென்றது யார்? அவர் சங்கரருக்கு என்ன ஆக்ஞை பிறப்பித்தார்?*

சங்கரருக்கு அப்பொழுது பதினாறு வயது நிறைகிற சமயம். தொண்டு கிழவரான ஒரு பிராஹ்மணர் அவரிடம் வாதம் செய்ய வந்தார். சங்கரர் செய்துள்ள ப்ரஹ்ம சூத்ர பாஷ்யத்தை ஆட்சேபித்து அந்தக் கிழவர் எதிர் வாதம் செய்ய ஆரம்பித்தார்.

சங்கரர் தமது கூர்ந்த அறிவுத் திறனால் அந்த எதிர் வாதங்களுக்கு தக்க சமாதானங்களை உரைத்தார். ஆனால் கிழவரும் மதி நுட்பத்தில் சங்கரருக்கு எந்த விதத்திலும் சளைத்தவராக இல்லை. இவர் ஒரு உண்மையை நிலை நாட்டினால், அடுத்த வரியிலேயே அவர் மேலும் பல ஆட்சேபங்களைக் அவைகளில் கிளப்பினார். வாதம் பல நாடகளுக்கு தொடர்ந்து நடந்து கொண்டிருந்தது.

'நமது குருவுக்கு சமமாக எதிர் வாதம் செய்பவர் யாராக இருக்கக் கூடும்' என சங்கரரின் சிஷ்யரான பத்மபாதர் சிந்தித்தார். இந்த கிழவர் சாதாரண பண்டிதராக இருக்க முடியாது. தெய்வாம்சம் கொண்ட உயர்ந்த மஹானாக தான் இருக்க வேண்டும் என தீர்மானித்தார். ப்ரஹ்ம சூத்ரத்தை இயற்றிய வியாச பகவானாகத் தான் இருக்க வேண்டும் என்னும் முடிவுக்கு வந்தார். அப்படியானால் இந்த வாதத்திற்கு முடிவு எப்படி ஏற்பட வாய்ப்பேது?

சங்கர: சங்கர: ஸாக்ஷாத் வ்யாசோ நாராயண: ஸ்வயம் !
தயோர் விவாதே ஸம்ப்ராப்தே கிங்கர: கிம் கரோம்யஹம் !!

வியாசரோ பகவான் ஸ்ரீமன் நாராயணனின் அவதாரம். சங்கரரோ ஸ்ரீ பரமேஸ்வரனின் அவதாரம். ஆகவே வாதத்தை ஒரு முடிவுக்கு கொண்டுவர வேண்டும் என்னும் நோக்கத்தோடு, பத்மபாதர், அந்தணராக வந்த கிழவரை நோக்கி, 'இந்த பாஷ்யமானது தங்களது கருத்தை அநுசரித்ததாக இருந்தால் தங்கள் சுய உருவை காட்ட வேண்டும்' எனக் கேட்டுக் கொண்டார்.

உடனே வியாசர் தனது சுய உருவை வெளிப்படுத்தினார். வியாசரை சந்தித்ததில் சங்கரர் மகிழ்ந்தார, தன் அவதார பலன் கிட்டியதாக நினைத்தார். 'நான் வந்த காரியம் முடிந்தது. பதினாறு

ஆண்டுகளும் முடிந்தன. நான் திரும்பி செல்ல் அநுக்ரஹம் வேண்டும்' என்றார் சங்கரர்.

'வந்த காரியம் இன்னும் பூர்த்தியாகவில்லை. பாஷ்யம் எழுதினால் மட்டும் போதாது. அதிலே சொல்லப்பட்ட கருத்துகளை பாரதம் முழுவதும் பரவச் செய்ய வேண்டும். பாரத தேசம் பூராவும் திக் விஜயம் செய்து பாஷ்யத்தில் சொல்லப் பட்ட விஷயங்களை ப்ரச்சாரம் செய்ய வேண்டும். அங்கங்கே விவாதங்கள் செய்து துர்மதங்களை நிரசனம் செய்ய வேண்டும். இன்னும் பதினாறு ஆண்டுகள் அதற்காக வழங்கப்படுகிறது' என்று சொல்லி வியாசர் தன் இடத்திற்கு சென்று விட்டார்.

வியாச பகவானின் ஆக்ஞைப்படி சங்கரர் திக் விஜயம் செய்ய காசியிலிருந்து புறப்பட்டார்.

### *33. பத்மபாதாச்சாரியார் என்பவர் யார்? அவரின் பூர்வாஸ்ரம பெயர் என்ன? அவர் சங்கரிடம் சிஷ்யராக சேர்ந்தாரா? அவருக்கு பத்ம பாதர் என பெயர் எவ்வாறு வந்தது?*

சோழ தேசத்தைச் சேர்ந்த ஸநந்தனன் என்ற பெயர் கொண்ட இளைஞன் சங்கரரிடம் வந்து தன்னை சிஷ்யனாக ஏற்றுக் கொள்ளும்படி வேண்டினான். அறிவில் முதிர்ச்சி அடைந்த ஸ்நந்தனனை சங்கரர் கருணையோடு சிஷ்யனாக ஏற்றுகொண்டார்.

ஒரு சமயம் கங்கையின் மறுகரையில் குருவின் வஸ்த்ரங்களை துவைத்து ஸநந்தனன் காயப் போட்டு கொண்டிருந்தார். எதிர்கரையில் இருந்த சங்கரர் அவரை அவசரமாக வஸ்த்ரங்களை எடுத்து கொண்டு வர சைகை செய்தார். குருவின் ஆக்ஞையை சிரமேற்கொண்டு ஸநந்தனன் கங்கையை கடக்க ஆரம்பித்தார். கங்கையிலோ திடீர் வெள்ளம் தோன்றி பெருக்கெடுத்து ஓடுகிறது. ஸநந்தனரோ குருவிடம் வஸ்த்ரம் கொடுக்க வேண்டும் என்னும் சிந்தனையைத் தவிர வேறு எதுவும் அறியாதவராய் நீரோட்டத்தின் மீது நடந்து சென்று கொண்டிருந்தார். என்ன ஆச்சரியம். அவர் எடுத்து வைக்கும் ஒவ்வொரு அடியிலும் தாமரை மலர் தோன்றி அவரை தாங்கியது. எதையும் அறியாமல் ஏகாக்ர சிந்தையோடு மறுகரை அடைந்து வஸ்த்ரத்தை சேர்ப்பித்தார்.

வணங்கிய ஸநந்தனரை சங்கரர் ஆசிர்வதித்து விட்டு, அவர் நடந்து வந்த பாதையில் தாமரைகளாக இருப்பதை காணச் செய்து,

நடந்த அதிசயத்தையும் அவருக்கு சங்கரர் தெளிய வைத்தார். கூடியிருந்த மற்ற சிஷ்யரகளும் அவரது குருபக்தியை கண்டு வியந்தார்கள். அன்றிலிருந்து அவர் (ஸ்நந்தனர்) 'பத்ம பாதர்' என அழைக்கலானார்.

### *34. பத்மபாதருக்கு பூர்வாஸ்ரமத்தில் ஏதேனும் மந்த்ர உபதேசம் ஆகியிருந்ததா? அந்த அதிதேவதையின் தரிசனம் கிடைத்ததா?*

பத்மபாதர் சோழ தேசத்தில் இருந்த போது ஒரு மஹானிடம் நரசிம்ஹ மந்திரத்தை உபதேசம் பெற்றார். அந்த மந்த்ரத்தை கோடி கணக்கில் ஸ்ரத்தையோடு ஜபித்து சித்தியும் பெற்றிருந்தார். அவருக்குள் ஒரு தடவை நரசிம்ஹ மூர்த்தியை தரிசித்து விட வேண்டும் என்னும் ஆவல் அதிகரித்துக் கொண்டிருந்தது. காட்டிலெல்லாம் தேட ஆரம்பித்தார். அந்த சமயத்தில் ஒரு வேடன் அவர் எதிரே வந்துக் கொண்டிருந்தான். அவன் மிகுந்த வினயத்தோடு பத்ம பாதர் எதை தேடுகிறார் என தெரிந்துக்கொள்ளும் ஆவலில் அவரைக் கேட்டான். பத்ம பாதர் தான் தேடும் மிருகத்தின் அடையாளத்தை, அதாவது தலை சிம்ஹமாகவும் உடல் மனிதன் போன்றது என்றவுடன், அந்த வேடன் இது வரை காட்டில் அது போன்ற ஒரு மிருகத்தை கண்டதில்லை என்று பதில் சொன்னான்.

நரசிம்ஹ ஸ்வாமியின் தீவிர பக்தரான பத்ம பாதர் 'அப்படி ஒரு மிருகம் உண்டு' என்று தீர்மானமாக சொன்னார்.

அதற்கு பிறகு வேடன் அதை வேறு எந்த சிந்தனை ஏதும் இல்லாமல் எந்த நேரமும் இதைப் பற்றியே சிந்தித்துக் கொண்டு அலைந்தான். அவன் படும் அல்லல் கண்டு நரசிம்ஹ ஸ்வாமி அவன் முன் ப்ரசன்னமானார். அவரை பார்த்தவுடன், வேடனுக்கு தோன்றிய முதல் எண்ணம் இந்த மிருகத்தை தேடி அலையும் பத்மபாதர் முன் நிறுத்திவிட வேண்டும் என்பது தான்.

ஸ்வாமியை புரிந்துகொள்ளாமல், மிருகம் என்று நினைத்துக் கொண்டு, அருகில் கிடைத்த கொடிகளை வைத்துக் கட்டி இழுத்துச் சென்று பத்மபாதர் முன் நிறுத்தினான். தன்னையே 'ஊண் உறக்கமில்லாமல்' சிந்தித்து கொண்டிருந்தவன் 'இழுத்த இழுப்புக்கு' கருணையோடு ஸ்வாமி ஒத்துழைத்தார்.

ஆனால் வேடன் கண்ட மிருகத்தை, பத்மபாதரால் காண முடியவில்லை. பத்மபாதருக்கு அநுக்ரஹம் செய்யும் நேரம் வரவில்லை என்பது தெய்வ சித்தம் போலும்! காண முடியவில்லையே என்னும் தாபம் பத்மபாதர் மனதின் அடித்தளத்தில் இருந்துக் கொண்டு இருந்தது.

### *35. பத்மபாதரின் தாபம் எப்படி நிவர்த்தியாயிற்று? அந்த மந்த்ரோபதேசம் தக்க சமயத்தில் எவ்வாறு உதவியது?*

காபாலிகர்கள் என்பவர்கள் பெரும்பாலும் மயானத்தில் வசிப்பார்கள். எலும்புகளைக் கோர்த்து மாலையாக அணிந்து கொள்வார்கள். அவர்கள் பிரியமாக சாப்பிடும் மாமிசத்தை இறைவனுக்கும் படைத்து விட்டு உண்பார்கள். இந்த வகை பூஜை முறையை சங்கரர் கண்டனம் செய்தார். அதனால் அவர்களுக்கு சங்கரரை பிடிக்காமல் போயிற்று.

அவரை தீர்த்துக்கட்ட வேண்டும் என்னும் நோக்கத்தோடு ஒரு காபாலிகன் அவரை அணுகினான். சற்று சாமர்த்தியமாக அவரை அவனது வலையில் சிக்க வைக்க வேண்டும் என்று ஆலோசித்தான். அவரது கருணை உள்ளத்தை தனக்கு சாதகமாக்கி கொள்ள திட்டமிட்டான். அவரை வணங்கினான். 'எவ்வளவு பலி கொடுத்தும் எங்கள் தேவனின் தரிசனம் கிடைக்கவில்லை. 'அஷ்டமா சித்திகள் அடைந்த துறவியின் தலையையாவது அல்லது புதிதாக முடி சூடிகொண்ட மன்னனின் தலையையாவது பலி கொடுத்தால் எங்கள் தெய்வம் சந்தோஷப்படும். உடனே தரிசனமும் கேட்ட வரமும் கிடைக்கும் என்று ஒரு அசிரீரி கூறியது. அரசனின் தலையைக் கேட்டால் என் தலை போய்விடும். பரம கருணாமூர்த்தியான தாங்கள் தான் என் விருப்பம் நிறைவேற உதவ வேண்டும்' என மண்டியிட்டு யாசித்தான்.

சங்கரர் தன் தலையை வேண்டுமானால் அவன் எடுத்துக் கொள்ளலாம் என சம்மதம் தெரிவித்தார். மேலும் 'என் சீடர்களுக்கு இந்த விஷயம் தெரிய வேண்டாம். குருவை பலி கொடுக்க அவர்கள் ஒப்புக் கொள்ள மாட்டார்கள். நான் தனியாக தியானம் செய்யும் நேரம் பார்த்து உன் விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்' என்றார். காபாலிகனுக்கு அளவற்ற சந்தோஷம்.

தக்க சமயமாக சங்கரர் தனியாக தியானத்தில் இருக்கும் நேரத்தில் காபாலிகன் அவர் தலையை எடுக்க உடை வாளை

உறுவினான். 'நிறுத்து, நிறுத்து' என்று அவசரமாக யாரோ உரக்கக் கத்திக் கொண்டே ஓடி வந்தாரகள். பிறகு சிம்ஹ கர்ஜனைப் போன்ற ஒரு சிரிப்பு. நிஷ்டையில் இருந்து கண் விழித்த சங்கரர் காபாலிகனின் உடல் இரண்டாக கிழித்தெறியப் பட்டிருப்பதை பார்த்தார். அருகில் ஆவேச நிலையில் பத்மபாதர் இருப்பதையும் பார்த்தார்.

'என்ன நடந்தது' என்பது போல் சங்கரர் பத்மபாதரை பார்த்தார். 'எனக்கொன்றும் தெரியாது. நான் கங்கையில் ஸ்நானம் செய்து கொண்டிருந்தேன். ஏதோ ஒரு சக்தி என் உடலில் புகுந்தது போல இருந்தது. என் நிலை மறந்தேன். இந்த இடத்தை நோக்கி என் உணர்வு இல்லாமல் தான் வந்திருக்க வேண்டும். வேடனுக்கு தரிசனம் தந்த நரசிம்ஹமூர்த்தி எனக்கு தரிசனம் தரவில்லை. ஆனால் தக்க சமயத்தில் நான் வருகிறேன் என்று சொல்லியிருந்தார். அவர் தான் என் மேல் ஆரோகணித்து வந்திருக்கிறார் போலிருக்கிறது. அவர் வருவதற்கு இதை விட மிகவும் உகந்த சமயம் வேறெதுவாக இருக்க முடியும்!' என பத்மபாதர் பதிலளித்தார்.

நீராடிக் கொண்டிருந்த பத்மபாதருக்கு குருவின் தலையைத் துண்டிக்க காபாலிகன் முயற்சி செய்கிறான் என்பதை பார்த்தவுடன் நரசிம்ஹ மூர்த்தியின் ஆவேசம் வந்திருக்க வேண்டும். வெகு வேகமாக ஓடி வந்து அவனை பத்மபாதர் நாராய் கிழித்து போட்டிருப்பார் என குருவும் மற்றவர்களும் ஊகித்தனர்.

### *36. வியாச பகவான் ஆக்ஞைப்படி திக் விஜயத்திற்கு புறப்பட்ட சங்கரர் முதலில் எங்கு சென்றார்? அங்கு அவர் யாரை சந்தித்தார்?*

'அத்வைத' தத்துவத்தை லோகத்திற்கு பிரசாரம் செய்ய காசியிலிருந்து புறப்பட்டு ப்ரயாகையை சங்கரர் அடைந்தார். அங்கு ருத்ரபுரம் என்னுமிடத்தில் குமாரில பட்டர் என்னும் க்யாதி பெற்ற மீமாம்சகர் வசித்து வந்தார். வழக்கத்தில் இருந்து விடுப்பட்ட கர்மாக்களை புனருத்தாரணம் செய்யவே அவதரித்தவர். வேதங்களை ஆதாரமாக கொண்டு கர்மாக்களை செய்ய வேண்டிய அவசியத்தை ப்ரச்சாரம் செய்தவர். பௌத்தர்கள் அங்கு சூனிய வாதத்தை பரப்பி மக்களிடையே கர்மாக்களின் மேல் அவநம்பிக்கையை வளர்த்து விட்டிருந்தார்கள். நாளடைவில் அங்கு நித்ய கர்மானுஷ்டானங்கள், ஹோமங்கள், யாகங்கள் இவைகளை செய்வதை பௌத்த வாதத்தின் தக்கத்தால் செய்வாறின்றி விட்டு போயிருந்தன. ஸுப்ரஹ்மண்யரின்

அவதாரமான குமாரில பட்டர் பௌத்த சித்தாந்தங்களை வாதத் திறமையால் தகர்த்து வைதிக கர்மாக்களை மறுபடியும் மக்களை செய்ய வைத்தார். அவரை அவரது சிஷ்யர்களோடு வென்று விட்டால் அனைவரையும் அத்வைதிகளாக மாற்றிவிடலாம் என்னும் எண்ணத்தோடு சங்கரர் அவரை சந்திக்க முயன்றார்.

### *37. வைதிக மதத்தையும் கர்மாக்களையும் புனருத்தாரணம் செய்து கொண்டிருக்கும் குமாரில பட்டரை வாதத்தில் வெல்ல வேண்டிய அவசியமென்ன?*

குமாரில பட்டர் ஒரு கர்மவாதி. வேதத்தின் முற்பகுதியாகிய கர்ம காண்டத்தை மட்டும் ப்ரமாணமாக எடுத்துக் கொள்வார். 'வேதத்தில் சொல்லப்பட்டிருக்கும் கர்மாக்களை ஒழுங்காக செய்தால் அதுவே அதற்கான பலனை அளிக்கப் போகிறது. பல தாதா அல்லது கர்மத்திற்கான பலனை அளிப்பவன் என்று ஒருவருக்கான தேவை எங்கிருக்கிறது? வேதத்தில் அநுஷ்டானங்களையும்., அவைகளைச் செய்தால் கிடைக்கும் பலன்களையும் விதிக்கப்பட்டிருக்கிறது. வேதத்தை மீறிய ப்ரமாணம் ஒன்றுமில்லை. அதனால் பலதாதா என்று சொல்லப்படும் ஈஸ்வரனுக்கு ப்ரசக்தியே இல்லை' என்பது அவரது கொள்கை. ஆகவே 'ஸகுண ஈஸ்வரனையும், நிர்க்குண ப்ரஹ்மத்தையும்' அவர் ஒப்புக்கொள்வதில்லை.

சங்கரர் வாதிட்டு, 'ஈஸ்வரன் என்று ஒருவன் உண்டு. அவன் தான் வேதத்தையே அளித்தவன். உபனிஷத்துகள் ஒவ்வொன்றும் இந்த ப்ரபஞ்சம் ஸ்ருஷ்டியான விதத்தை சின்ன சின்ன வித்தியாசங்களோடு சொல்லியிருந்தாலும், மொத்த ப்ரபஞ்சமும் லோக ஸ்ருஷ்டியும் அனைத்து வெளிப்பாடுகளும் இறைவனின் தோற்றமே என்று மாற்று கருத்து இல்லாமல் ஒருமித்தே அனைத்து உபனிஷத்துக்களும் சொல்கின்றன. 'ததநுப்ரவிஸ்ய' என்று படைத்த அனைத்து ஜீவன்களிலும் ப்ரஹ்மன் ஜீவாத்மாவாக நுழைந்து எல்லாமாக பரவி நிற்கிறது. சேதனமான அந்த ஈஸ்வரனே பலனை தர வல்லவன். 'பலமத உபபத்தே' என்று ப்ரஹ்ம ஸூத்ரம் கூறுகிறது. அவன் தான் கர்மாக்களுக்கான பல தாதா. ஆகவே ஈஸ்வரன் 'ஸகுண'- குணங்களோடு கூடியவன். ப்ரஹ்மம் நிர்க்குணம் - குணம் ஏதும் அற்றது' என்று தெளிவுபடுத்தவும் விரும்பினார்.

***38. சங்கரர் சந்திக்க நினைக்கும்போது குமாரில பட்டரின் நிலை என்ன?***

குமாரில பட்டர் கர்மாக்களைப் பற்றி எடுத்துரைக்க தொடங்கிய சமயத்தில் மக்களிடையே பௌத்த மத ப்ரச்சாரமே தலை தூக்கி இருந்தது. பௌத்த மத சித்தாந்தங்களை தகர்த்தால் தான் வேறொரு கொள்கையை ஏற்றுக் கொள்வார்கள் என்னும் கடுமையான நிலையில் இருந்தது. அதனால் குமாரில பட்டர் பௌத்த மத ஆசிரியர்களிடம் ஒரு சிஷ்யராக சேர்ந்து, அவருக்கு அம்மதத்தில் நம்பிக்கை இருப்பதாக அவர்களை நம்ப வைத்து, அந்த மதத்தின் கருத்துக்களை தெரிந்து கொண்டார். இது பிற்காலத்தில் அம்மதத்தில் உள்ள குறைகளை சுட்டி காட்டி, வேத நெறியையும் கர்மாக்களையும் ஸ்தாபிக்க மிகவும் அனுகூலமாக இருந்தது.

பௌத்த குருக்களுக்கு நம்பிக்கை துரோகம் செய்து விட்டதற்கு ப்ராயஸ்சித்தமாக தர்ம ஸாஸ்த்ரத்தில் சொன்னபடி சிரமமான முறையில் மரணத்தை ஏற்றுக் கொள்ள குமாரில பட்டர் முன் வந்தார். உமிக் காந்தல் சிறிது சிறிதாக கனிந்து உடலை பஸ்மமாக்கும் குணமுடையது. இதற்கு துஷாக்னி ப்ரவேசம் என்று பெயர், இது மிகவும் வேதனையை தரக் கூடியது. தான் செய்த பிழையான குரு துரோகத்திற்கு பிராயஸ்சித்தமாக குமாரில பட்டர் அதை ஏற்றுக் கொண்டு மரணத்தை எதிர் நோக்கி கொண்டு இருந்தார்.

***39. சங்கரர் குமாரில பட்டரை சந்தித்தாரா? குமாரில பட்டரின் கொள்கையில் மாற்றம் ஏற்பட்டதா? சங்கரரை அவர் என்ன செய்ய சொல்லி வேண்டிக் கொண்டார்?***

ஸ்ரீ சங்கரர் ஞான மார்க்கத்தைப் பற்றி அவரிடம் அவசர அவசரமாக விளக்கினார். கர்மா மட்டும் செய்தால் போதாது என்பதைத் தர்க்க ரீதியில் போதித்தார். குமாரில பட்டர் மனதில் மாற்றம் ஏற்பட்டது.

குமாரில பட்டர் சங்கரரிடம், 'நீங்கள் ஸ்ரமம் பாராது இவ்வளவு தூரம் வந்து எனக்கு தரிசனம் தந்ததே எனக்கு சந்தோஷத்தை தருகிறது. தாங்கள் கூறிய கருத்துக்கள் என்னால் ஏற்றுக்கொள்ள தக்கவையாக இருக்கின்றன. உங்கள் கொள்கையை பரப்பி அனைவரும் அறிய செய்ய வேண்டும் எனத் தோன்றுகிறது. நான் மிகவும் இயலாத நிலையில் இருக்கிறேன்.' என்றார்.

அப்பொழுது அங்கு கூடியிருக்கும் அவரது சிஷ்யர்களிடம், 'நாம் செய்யும் கர்மாக்களை முதலில் ஈஸ்வரனுக்கு அர்ப்பணிக்க வேண்டும். கடவுளுடைய் அருள் இல்லாமல் எதுவும் நடைபெறாது என்றார். குமாரில பட்டரின் அறிவுரையை அனைவரும் ஏற்றனர், அன்று முதல் ஒருவர் செய்யும் கர்மாக்களுக்கு சங்கல்பம் செய்து கொள்கையில் 'ஸ்ரீ பரமேஸ்வர ப்ரீத்யர்த்தம்' என்று சொல்லும் வழக்கமும் ஏற்பட்டது.

மேலும் சங்கரரிடம், 'நீங்கள் ஸ்ரமம் பாராது மாஹிஷ்மதி நகரில் மண்டன மிஸ்ரர் என்று ஒரு தீவிர மீமாம்சகர் இருக்கிறார். (வேதத்தின் பூர்வ பாகத்தில் சொல்லியுள்ள கர்மாக்களை செய்தால் அதற்கான பலனை அவைகள் கொடுத்துவிடும். பல தாதா என்று வேறொருவர் அவசியமில்லை என்னும் கொள்கையை உடையவர்கள்). உங்கள் வாதத்தால் அவரை உங்கள் வசம் செய்து கொள்ளுங்கள். அவர் மாறினால் அவரை சார்ந்து அனைவரும் மாறி விடுவார்கள். உங்கள் கொள்கைகளை ப்ரச்சாரம் செய்யவும் தடையில்லாமல் இருக்கும்' என் சொல்லி விட்டு குமாரில பட்டர் உயிர் துறந்தார்.

### *40. ஆதி சங்கரர் மண்டன மிஸ்ரரை சந்திக்க செல்லும்போது என்ன அதிசயம் நிகழ்ந்தது?*

மண்டன மிஸ்ரரை தேடி நர்மதை கரையில் உள்ள மாஹிஷ்மதி நகருக்கு சங்கரர் சென்றார். அந்த ஊரில் ஒரு பெரிய அரண்மனையில் மண்டன மிஸ்ரர் வாழ்ந்து வந்தார். குமாரில பட்டர் சொல்லிய படி மண்டன மிஸ்ரரிடம் வாதிட வேண்டும் என்னும் நோக்கத்தோடு சங்கரர் போய் கொண்டிருந்தார். தண்ணீர் பாத்திரத்தை தலையில் வைத்துக் கொண்டு வீடு நோக்கி செல்லும் பெண்கள் எதிர்பட்டார்கள். உடனே அவர்களிடம் மண்டன மிஸ்ரரின் வீடு எங்கு இருக்கிறது என்று கேட்டுத் தெரிந்து கொள்ளலாம் என்னும் எண்ணத்தில் வசன நடையாகத்தான் கேட்டார், ஆனால் அந்த பெண்களோ ஸ்லோக வடிவில் பதிலைத் தந்தார்கள்.

ஸ்வத: ப்ரமாணம் பரத: ப்ரமாணம் கீராங்கனா யத்ர ச
ஸங்கிரந்தே!
த்வாரஸ்த நீடாங்கநா ஸன்நிருத்தா ஜாநீஹி தன்மண்டன
பண்டிதௌக: !!

அதாவது எந்த வீட்டு வாசலில் இருக்கும் கிளிகள் ஸ்வத: ப்ரமாணம் பரத: ப்ரமாணம் என்று சொல்லிக் கொண்டு தங்களிடையே

தர்க்கம் செய்து கொண்டிருக்கின்றனவோ அந்த வீடு தான் மண்டன மிஸ்ரருடையது என்று பொருள்பட அவர்கள் கூறினார்கள். அந்த சிக்கலான ப்ரமாண்ய வாதங்களை கிளிகள் பேசுகின்றன எனக் கேட்டவுடன் சங்கர் மிகவும் சந்தோஷப்பட்டார்.

### *41. ஸ்வத: ப்ரமாணம், பரத: ப்ரமாணம் என்றால் என்ன?*

ஒரு பொருளைப் பார்த்தவுடன் அது என்ன என்பதை தெரிந்து கொள்கிறோம். அது வேறு ஒரு பொருளாக இருக்குமோ என்னும் சம்சயம் இல்லை. நிஸ்சயமாக நம்மால் அந்த பொருளை என்னவென்று தெரிந்துகொள்ள முடிகிறது. அந்தப் பொருளைப் பற்றி உண்மையான அறிவு, ஞானம் ஏற்படுகிறது.ஒரு பொருளை பார்க்கும் போது தெளிவாக நமக்கு ஞானம் ஏற்படுவது ஸ்வத: ப்ரமாணம்.

வெள்ளை வெளேர் என்று ஒரு பொருள் சற்று தூரத்தில் தெரிகிறது. படிகமாக இருக்கும் என்று தோன்றுகிறது. ஒரு வேளை கற்கண்டு கட்டியாககூட இருக்க கூடும் எனவும் எண்ணம் எழுகிறது. சம்சயமாக இருக்கிறது. ஆரம்பத்தில் ஏற்பட்ட ஞானம் மூலம் அதை நிஸ்சயமாக உறுதிபடுத்திக் கொள்ள முடிவதில்லை. நமக்கு ப்ரமம் (bramam) ஏற்படுகிறது. பார்த்தவுடன் நிஸ்சயமாக சொல்ல முடிவதில்லை உறுதிப்படுத்தி கொள்ள, வேறொன்றிலிருந்து ஞானத்தை பெற வேண்டியிருக்கிறது. இப்படி வேறொன்றின் உதவியால் அறிவதை பரத: ப்ரமாணம் என்பார்கள்.

உண்மையான ஞானம் பெற, ப்ரமாணம், அப்ரமாணம் என்று பண்டிதர்கள் நிறைய தர்க்கம் செய்து வாத, ப்ரதிவாதங்களினால் ஆராய்ந்து கொண்டிருக்கும் ஒரு சிக்கலான விசாரத்தைக் மண்டன மிஸ்ரர் வீட்டுக் கிளிகள் பேசிக் கொண்டிருந்தன என்றால் மண்டன மிஸ்ரர் எந்த அளவு பாண்டித்தியமும் சாஸ்த்ரங்களில் நிபுணத்துவமும் பெற்றிருந்தார் என்பதை புரிந்து கொள்ளலாம்.

### *42. சங்கரரால் சுலபமாக மண்டன மிஸ்ரரை சந்திக்க முடிந்ததா? சங்கரரை பார்த்தவுடன் மண்டன மிஸ்ரர் எப்படி வரவேற்றார்?*

சொன்ன அடையாளங்களைக் கொண்டு மண்டன மிஸ்ரர் வீட்டை சங்கரர் அடைந்தார். அன்று மண்டன மிஸ்ரர் வீட்டில் ஸ்ரார்த்தம். மிகவும் ஸ்ரத்தையோடு அதற்கான ஆயத்தங்கள் நடந்துக்

கொண்டிருந்தன. கர்மவாதியான மண்டன மிஸ்ரர் எந்த வித இடைஞ்சலும் வந்துவிடக் கூடாது என்று வாயில் கதவை தாளிட்டிருந்தார். ஸ்ரார்த்த காலம் வரை வெளியிலிருந்து எவரையும் உள்ளே விடுவதில்லை என தீர்மானமாக இருந்தார்.

சங்கரரும் விடுவதாக இல்லை. தனது யோக சக்தியினால் வீட்டிற்குள் நுழைந்து விட்டார். ஒரு சந்நியாசியை ஸ்ரார்த்த சமயத்தில் மண்டன மிஸ்ரர் கொஞ்சமும் எதிர்ப்பார்க்கவில்லை. சற்று கோபமாக சங்கரரிடம் கேள்வி கணைகளைத் தொடுத்தார் மண்டன் மிஸ்ரர். அவற்றிற்கான பதில்களை மிகவும் சாதுர்யமாக குறும்பு மேலிட சங்கரர் சொன்னார். மண்டன மிஸ்ரருக்கு கோபம் ஏற்படலாயிற்று. தக்க சமயத்தில் அங்கு வரித்த ப்ராஹ்மணர்களாக வந்திருந்த மஹான்கள் வேத வியாசரும், ஜைமினியும், உபதேச வார்த்தைகளால் மிஸ்ரரின் கோபத்தை தணித்து, 'உயர்ந்த சந்நியாசியான சங்கரரை ஸ்ரார்தத்தில் விஷ்ணுவாக வரித்து, விஷ்ணு இலையில் உட்கார்த்தி வைத்து விடலாம்' என்று யோஜனையும் கூறினார்கள்.

மண்டன மிஸ்ரரால் அவர்கள் வார்த்தையை தட்ட முடியவில்லை. உடனே சங்கரரிடம், 'யதீஸ்வரரான நீங்கள் எங்கள் பிக்ஷையை ஏற்று ஸ்ரார்தத்தை நடத்திக் கொடுத்து அநுக்ரஹிக்க வேண்டும்' என மிஸ்ரர் கேட்டார். 'நான் அன்ன பிக்ஷைக்காக வரவில்லை. வாத பிக்ஷைக்காக வந்திருக்கிறேன். உங்களுடன் வாதம் செய்ய சொன்னது குமாரில பட்டர்' என்றார் சங்கரர்.

சற்றும் வாதத்தை எதிர்பார்க்கவில்லை என்ற போதும் குமாரில பட்டர் அனுப்பியிருக்கிறார் என்பதை கேட்டவுடன் மிஸ்ரரிடம் இருந்த கோபம் சற்று குறைந்தது. சாந்தமாக, 'முதலில் இந்த ஸ்ரார்த்த பிக்ஷை முடியட்டும். பிறகு சாஸ்த்ர பரீக்ஷையை வைத்துக் கொள்ளலாம்' என்று மிஸ்ரர் கூறினார். ஸ்ரார்த்தம் குறையின்றி நிறைவேறியது.

### *43. சங்கரர், மண்டன மிஸ்ரர் இவர்களிடையே வாதம் நடந்ததா? இவர்கள் வாதத்திற்கு யார் நடுவராக இருந்தார்கள்? முடிவில் யார் வாதத்தில் வென்றார்கள்?*

ஸ்ரார்த்தம் முடிந்தவுடன் நிமந்த்ரணம் இருந்த மஹான்கள் இருவரும் சென்று விட்டனர். சாஸ்த்ர பரீக்ஷை உடனே ஆரம்பிப்பது என தீர்மானமாயிற்று. பொதுவாக வாதங்களில் இரு கட்சி காரர்களும் தங்கள் கருத்தை சொல்வார்கள். சாஸ்த்ரத்திலிருந்து

மேற்கோள்களையும் முன் வைப்பார்கள். அப்படி இரு கட்சி காரர்களும் தங்கள் வாதத்தை சொல்லும் போது எது சரி, என்பதை நிர்ணயிக்க ஒருவர் வேண்டும் அல்லவா? அவர் கற்றவராகவும் நேர்மையானவராகவும் இருக்க வேண்டும் அல்லவா? அத்தகைய தகுதி யாருக்கு இருக்கிறது என்று யோசித்தார்கள்.

மண்டன மிஸ்ரரின் மனைவி சரஸ்வாணி (உபயபாரதி) அதற்கு தகுதியானவர் என்று இருவரும் ஒப்புக்கொண்டார்கள். உபயபாரதி சாக்ஷாத் சரஸ்வதியின் அவதாரம். சாஸ்திரங்கள் அனைத்தையும் அறிந்தவர். நடுவராக இருக்க எல்லா தகுதிகளும் கொண்டவர். முக்யமாக வாதத்தில் பங்கேற்கும் மண்டன மிஸ்ரரின் மனைவி என்கிற காரணத்தால் வேண்டாமென்று சொல்ல முடியாது ஏனென்றால் பாரபட்சம் பார்க்காமல் நடுநிலை வகித்து தீர்ப்பு கூறும் நேர்மை கொண்டவர். இருந்தும் சரஸ்வதி ஒரு யுக்தியை கையாண்டார். அன்று மலர்ந்து தொடுக்கப்பட்ட புஷ்ப மாலைகளை இருவரையும் கழுத்தில் போட்டுக் கொள்ளச் சொன்னார். 'யாருடைய மாலை முதலில் வாடுகிறதோ அவரே தோற்றவர்' என்றார். அந்த நிபந்தனையை இருவரும் ஒப்புக் கொண்டனர்.

அடுத்ததாக தோற்கப் போகிறவர் தனக்கு என்ன சிக்ஷை தந்துக் கொள்ள போகிறார் என்பது நிர்ணயமாயிற்று. 'வாதத்தில் சங்கரர் வென்றால், மண்டன மிஸ்ரர் துறவறம் ஏற்றுக்கொள்ள வேண்டும். அல்லது மண்டன மிஸ்ரர் வென்றால் சங்கரர் ப்ராயச் சித்தம் செய்து கொண்டு க்ருஹஸ்தராக மாறிவிட வேண்டும்' என முடிவாயிற்று. இந்த நிபந்தனையும் இருவராலும் ஒப்புக் கொள்ளப்பட்டது.

உபயபாரதியின் முன்னிலையில் 21 நாட்கள் வரை தொடர்ந்து வாதம் நடந்தது. 21ம் நாள் மண்டன மிஸ்ரர் மாலை வாட ஆரம்பித்தது. நடுவராக இருந்த உபயபாரதி மாலை வாடுவதைப் பார்த்தார். மிகவும் நேர்மையாக எழுந்து இருவரையும் வணங்கி விட்டு 'வாதம் செய்தது போதும். இத்துடன் நிறுத்திக் கொள்ளுங்கள். உங்கள் இருவரையும் உணவு உண்ண வேண்டுகிறேன்' என்று சொல்லி வாதத்தை முடித்து வைத்தார்.

மண்டன மிஸ்ரர் மனைவியின் செய்கையிலிருந்து தான் தோற்று விட்டதை உணர்ந்தார். சங்கரரிடம் துறவறம் ஏற்றுக்கொள்ள சித்தமானார்.

### *44. வாதம் செய்யும் இந்த இருவரின் கொள்கைகள் என்ன வென்று பார்ப்போம். மண்டன மிஸ்ரரின் கொள்கை என்ன?*

வேதங்கள் அநாதியானவை. அவைகளுக்கு மீறியது எதுவுமே இல்லை. வேதத்தில் சொல்லப்பட்டவைகளே ப்ரமாணமாகும். அவைகள் சப்த ப்ரமாணம். நாம் செய்ய வேண்டியதை சொல்லும் கட்டளைகள். வேதங்கள் நாம் செய்ய வேண்டிய கர்மாக்களை விதித்து ஆணையிடுகிறது. அப்படி கட்டளைகளைக் கொண்ட கர்ம காண்டமே இறுதியானது.

சுத்த சைதன்யத்திற்கு ஆரம்பமும் இல்லை முடிவும் இல்லை. கர்மாவும் கிடையாது. கர்த்தாவும் கிடையாது. செயல் எதுவும் நிகழாத ப்ரயோஜனம் ஏதும் ஏற்படாத, வேலையே இல்லாத நிலை.

மாறாக வேதத்தில் கர்ம காண்டத்தில் காரியங்களையும் அதன் பலன்களையும் சொல்கிறது. அவைகளை ப்ரமாணமாகக் கொண்டு, சரீரம் கொண்ட அனைத்து ஜீவன்களும் தங்கள் வாழ்நாள் முழுவதும் கர்ம காண்டத்தில் விதிக்கப்பட்ட கர்மாக்களை தொடர்ந்து செய்து கொண்டிருக்க வேண்டும் என்பதில் ஐயம் ஏதுமில்லை.

எந்தெந்த கர்மாக்களை செய்தால் என்னன்ன பலன்கள் ஏற்படும் என்று தெளிவாக கர்ம காண்டத்தில் சொல்லப்பட்டிருக்கும் போது அதற்காக தனியாக பலன்களை விநியோகிக்க ஒரு ஈஸ்வரன் அவசியமில்லை. கர்மாக்கள் செய்வதால் ஏற்படுகிற அபூர்வ சக்தியால் பலன்களும் அதற்கு ஏற்றவாறு கிடைத்து விடும். ஒரு செயலை செய்யப் போவது கர்த்தா தான் என்பதால் கர்மாவை அநுஷ்டிக்க கர்த்தா என்பவர் தான் தேவை; இறைவன் என்று ஒருவர் அங்கு தேவையில்லை. நம்மிடம் ஏற்படடும் சிந்தனைகளின் மூலம் செயல்கள் உருப்பெறுகின்றன. நல்ல சிந்தனைகள் மூலம் நல்ல செயல்கள் எழுகின்றன. அவைகள் மூலம் நல்ல பயனையும் பெற முடியும். எல்லோரும், மெத்தனமாக இருக்காமல், ஏதாவது ஒரு வேலை செய்ய வேண்டும். அப்படி நாம் செய்யும் செயல்கள் நல்லதாக இருக்கும் பக்ஷத்தில் நல்ல பயனையே தரும்.

இந்த பூவுலகத்தை கடவுள் தானே படைத்திருக்க வேண்டும் என்று சொன்னால் கடவுள் எதற்காக படைக்க வேண்டும்? இப்போது உள்ளது போலவே எப்பொழுதும் இருந்து கொண்டிருக்கும் அநாதியான உலகத்தை திடீரென்று உண்டாக்கப்பட்டதாக ஏன் நினைக்க வேண்டும்? மேலும் திடீரென்று ஒரு பொருள் எப்படி

உண்டாகும்? எந்த பொருளாக இருந்தாலும் அதற்கு ஒரு காரண, காரிய அடிப்படை நியாயம் இருந்திருக்க வேண்டும். அதன் சுழற்சியிலும் காரண காரிய பலனிலும் மாறுதல் ஏதும் இல்லாது இருக்கிற படியே உலகம் போய்க் கொண்டு இருக்கிறது. அந்த நிலையில் இறைவன் ஒன்றை புதிதாக படைக்க வேண்டிய அவசியமென்ன? ஆதலால் அநாதியாக நிகழ்ந்து கொண்டிருக்கும் ப்ரபஞ்சத்தில் புதிதாக படைப்புகள் ஏற்படுவது போல் ப்ரமமும் தேவையில்லை. அதற்கான ஈஸ்வரனும் அவசியமில்லை. விஹித கர்மாக்களை தொடர்ந்து விச்சின்னம் இல்லாமல் செய்து கொண்டிருந்தாலே போதும்.

### *45. சங்கரரின் கொள்கை என்ன?*

வேதங்களும் உபநிஷத்துக்களும் 'எது எப்பொழுதும் நித்தியமாக இருக்கிறதோ, (என்றும் இல்லையென்பது இல்லாததாக), அதுவே ப்ரஹ்ம ஸ்வரூபம் என்கின்றன. அதுவே 'சத்' என்னும் சத்தியமாகவும், சித் என்னும் சைதன்யமாகவும், 'ஆனந்த' ரூபமாக. பூரணமாக குறையொன்றும் இல்லாததாக இருக்கிறது எனவும், எங்கும் வியாபித்து எல்லையில்லாமல் 'அனந்தமாக' இருக்கிறது எனவும் சொல்கின்றன.. அந்த ப்ரஹ்மம் இரண்டற்றது, அது ஒன்றே. ஆனாலும் பூரணமானது.

ப்ரஹ்மம் அவித்யையோடு சேர்ந்திருக்கும் போது ஈஸ்வரனாக தெரிகிறது. ப்ரஹ்மம் அந்தகரணத்தோடு சேர்ந்திருக்கும் போது ஜீவனாக தெரிகிறது. அவித்யை அல்லது மாயையால் தோன்றிய இந்த ஈஸ்வரத்வம் ஜீவத்வம் இரண்டுமே சத்ய ரூபமில்லை. 'ப்ரஹ்மைவ சத்யம், ஜகன் மித்யா, ஜீவோ ப்ரஹ்மைவ நாபர:'. ப்ரஹ்மமே நிரந்தரமானது. இந்த ப்ரபஞ்சம் தாற்காலிக சத்யம். ஜீவாத்மா என்பது பரமாத்மாவை தவிர வேறு இல்லை. இதை உணர்ந்து ஜீவாத்மா தனது இயல்பு நிலையான ப்ரஹ்மத்தோடு (அஹம் ப்ரஹ்மாஸ்மி) ஐக்கியபடுத்திக் கொள்வது வாழ்க்கையின் குறிக்கோளாக இருக்க வேண்டும். வேதங்களும் உபநிஷத்துக்களும் 'பரமாத்மாவும் ஜீவாத்மாவும் வேறல்ல, ஒன்று தான்' என்று உறுதியாக கூறுகின்றன. மோக்ஷம் ஒன்று தான் நிரந்தரமாக ஜனன மரண சுழற்சியிலிருந்து விடுவிக்கும். சம்சார பந்தத்தை அறவே நீக்கும்.

வேதங்களில் சொல்லப்பட்ட விஹித கர்மாக்களை கட்டாயம் அநுஷ்டிக்கப்பட வேண்டும். இவைகள் நம் சித்தத்தை பண்படுத்தும். பக்தியும் நமது லக்ஷியத்தை அடைய ஒரு சன்மார்க்கம். இதுவும்

சித்தத்தை சுத்தப்படுத்தும். ஆனால், இவைகள் நமது இலக்கின் எல்லை அல்ல, இவைகள் சாதனங்கள் மட்டுமே, எனத் தெளிய வேண்டும். ஈஸ்வரன் தான் கர்மாக்களுக்கு பல தாதா. அசேதனமான கர்மா எப்படி பலனை நிர்ணயம் செய்து வினியோகிக்கும்? மேலும் கர்மாக்களுக்கான பலன்களை அநுபவிக்க ஆசைப்பட்டால் சம்சாரத்திலிருந்து மோக்ஷம் ஏற்படாது. அவைகளை அநுபவிக்க மறுபிறவி தான் கிடைக்கும். ஆகவே கர்மாக்களுக்கான பலனை 'ஈஸ்வரார்ப்பணம்' செய்துவிட வேண்டும். இந்த ஜனன மரண சம்சார பயம் போக வேண்டுமென்றால் 'அபயம்' அளிப்பது அத்வைதமே. அதனால் ப்ரஹ்மத்தோடு ஐக்கிய பாவத்தை வளர்த்து கொள்ள வேண்டும். நம்மோடு 'சித்த வஸ்துவாக' இருக்கும் ப்ரஹ்மத்தை உணர்ந்துக் கொள்ள வேண்டும். உணர்ந்து கொள்ள ஒரு சத்குரு அவசியம். அவரது அநுக்ரஹத்தால் தான் ப்ரஹ்ம ஞானம் ஏற்படும். விளக்கேற்றி வைத்தவுடன் தத்க்ஷணத்தில் ஒளி பரவி இருந்த இடம் தெரியாமல் இருட்டு போவது போல் ப்ரஹ்ம ஞானம் ஏற்பட்டவுடன் அவித்யை என்னும் மாயை மாயமாய் காணாமல் போய் விடும். ஸ்லாக்கியமான ப்ரஹ்மானந்தமே மிஞ்சும்.

### *46. மண்டன மிஸ்ரர் தன் தோல்வியை மறுப்பு ஏதுமின்றி ஒப்புக்கொண்டாரா? இல்லை யாரிடமாவது தனது சந்தேஹங்களை நிவர்த்தி செய்து கொண்டாரா?*

தோல்வியடைந்தது குறித்து சிறிதும் மண்டனர் வருத்தப் படவில்லை. முக்காலத்தையும் உணர்ந்த ஜைமினி முனிவர் 'கர்மாவிற்கு பலன் கர்மா தருகிறது, பரமாத்மா இல்லை' என உபநிஷதத்திற்கு விரோதமான கர்ம காண்ட சூத்திரங்கள் ஏன் இயற்றி உள்ளார் என ஐயம் ஏற்பட்டது. ஜைமினி முனிவரை அதனால் மண்டனர் த்யானித்தார். ஜைமினி முனிவர் அவர் முன்தோன்றி 'முக்காலத்திலும் இணையில்லாத துறவி சங்கரர். என் கருத்தும் அவர் கருத்தும் ஒன்றே. இனி நீ அவரின் அத்வைத மதத்தை ஏற்று சம்சார சாகரத்தை கடந்து விடு' என அறிவுறுத்தினார்.

### *47. சங்கரருக்கு அவர் முயற்சியில் பூரண வெற்றி கிடைத்ததா? இல்லை வேறு யாரிடமாவது வாதிட நேர்ந்ததா?*

மண்டன மிஸ்ரரின் மனைவி சரஸவாணி (உபயபாரதி), சங்கரரைப் பார்த்து, 'மனைவியை புருஷனின் அர்த்தாங்கினி என்று சொல்லி கேள்விபட்டதில்லையா? அதனால் என்னை வாதத்தில்

வெல்லாமல் எப்படி உங்களுக்கு பூரண ஜெயம் உண்டானதாக கருத முடியும்? 'சதுர் தசஸ* வித்யாஸ* ரமதே யா ஸ்ரஸ்வதி' என்று துதிக்கப்படும் சரஸ்வதியின் அவதாரமான சரஸவாணியுடன் சங்கரர் வாதம் செய்தார். விவாதத்தில் உயர்ந்த தத்துவங்கள் அனைத்தும் அலசி ஆராயப்பட்டன. ஒரு சமயத்தில், உபயபாரதி, 'சங்கரரே, நீர் யாரென்று நானறிவேன். மண்டனரின் அர்த்தாங்கினியான என்னையும் வாதத்தில் வென்றால் தான் உங்கள் வெற்றி பூரணமாகும்' என்பதாலேயே வாதிட்டேன். தங்களிடம் தோல்வி காண்பது மகிழ்ச்சிக்குரிய விஷயம் தான்' என்றார்.

### *48. மண்டன மிஸ்ரர் கொடுத்த வாக்குப்படி சந்நியாசம் வாங்கி கொண்டு சங்கரரின் சிஷ்ய ஆனாரா? அவர் சந்நியாஸ்ரம பெயர் என்ன?*

தான் கொடுத்த வாக்குப்படி மண்டனர் காஷாயம் தரித்துக் கொண்டு சந்நியாஸ்ரமத்திற்கு ஆயத்தமானார். சங்கரரின் பாதார விந்தங்களில் பணிந்தார். அவருக்கு மஹாவாக்ய உபதேசம் செய்து தனது சிஷ்யராக சங்கரர் அவரை ஏற்றுக்கொண்டார். மண்டனர், 'சுரேஸ்வரர்' என்னும் நாமாவையும் பெற்றார்.

### *49. மண்டன மிஸ்ரர் சந்நியாசம் வாங்கிகொண்ட பின் உபய பாரதியின் நிலைப்பாடு என்ன?*

ஒரு சமயத்தில் தேவலோகத்தில் துர்வாச மஹரிஷி வேதம் ஓதிக் கொண்டிருந்தார். அப்படி சொல்லும்போது ஒரு இடத்தில் அவருக்கு தடுமாற்றம் ஏற்பட்டு விட்டது. கேட்டுக் கொண்டிருந்த சரஸ்வதி தேவி தன்னையறியாமல் நகைத்து விட்டார். கோபக்காரரான துர்வாச மஹரிஷி அவரை பூமியில் பிறப்பெடுக்க வேண்டும் என்று சாபம் கொடுத்துவிட்டார். சிவபெருமானை எப்பொழுது நேருக்கு நேர் சரஸ்வதி சந்திக்கிறாரோ அப்பொழுது தான் சாப விமோசனம் ஏற்படும் என்றும் சொல்லியிருந்தார்.

ப்ரஹ்மாவின் அவதாரமான மண்டன மிஸ்ரரின் மனைவி சரஸவாணியாக அவதரித்த சரஸ்வதி தேவி, சங்கரருடன் வாதம் முடிந்தவுடன், அவருக்கு சாப விமோசனம் கிட்டியது. உடனே சத்யலோகம் செல்ல தயாரானார். சங்கரர் அவரை விடுவதாக இல்லை. 'வனதுர்கா' மந்திரத்தால் கட்டினார். தான் ஸ்தாபிக்க இருக்கும் பீடத்தில் அவரை அதிஷ்டானத் தேவதையாக இருக்க

வேண்டினார். அதனால் சரஸ்வதியையும் தங்களுடன் வரச் சொன்னார்.

### *50. அவர்கள் பின் வருவதற்கு ஒப்புக்கொண்ட சரஸ்வதி தேவி என்ன நிபந்தனை விதித்தார்? பிறகு என்ன நிகழ்ந்தது?*

சங்கரரும், சுரேஸ்வரரும் முன்னே நடந்து செல்ல தான் பின் தொடர்ந்து வருவதாக ஸரஸ்வதி தேவி சொன்னார். ஆனால் எக்காரணம் கொண்டும் அவர்கள் திரும்பி பார்க்கக் கூடாது என நிபந்தனையை விதித்தார். 'ஒருவேளை அப்படி அவர்கள், தேவி தங்களுடன் வருகிறாரா என திரும்பிப் பார்த்தால், அந்த இடத்திலேயே சிலை போல் நின்று விடுவேன்' என்றார்.'

துங்கபத்ரா நதிக்கரையில் நடக்கும் போது தேவியின் சிலம்பொலி காதில் விழாததால், சங்கரர் திரும்பி பார்த்தார். சரஸ்வதி அங்கேயே சிலையாகி விட்டார். அந்த இடத்தில் ஆலயமொன்றை நிர்மாணித்து சாரதா என்ற பெயரில் சரஸ்வதி தேவியை ப்ரதிஷ்டை செய்தார். அந்த இடம் ஸ்ரீவித்யா பீடமாக திகழ வேண்டும் என்னும் நோக்கத்தோடு, மடம் ஒன்றையும் நிறுவினார். 'ப்ருத்வீதரர்' என்பவரை முதல் மடாதிபதியாக நியமித்தார். அவருக்கு 'பாரதி' என்னும் பட்டமும் அளிக்கப்பட்டது.

### *51. சங்கரரின் யாத்திரையில் அடுத்து எந்த இடத்தில் ஒரு விசேஷ நிகழ்வு நடந்தது?*

சங்கரர் ப்ரயாகைக்கு அருகில் கங்கை கரையில் அமைந்துள்ள ஸ்ரீ பலி என்னும் ஊருக்கு விஜயம் செய்தார். அங்கு ஒரு பெரும் பணக்காரர் சங்கரரை தரிசனம் செய்ய அவர் அவருடைய மகனுடன் வந்திருந்தார். மேலும் அந்த தனவந்தர் சங்கரரிடம் 'தன் பிள்ளை ஊமை போல் இருந்து கொண்டு கேட்கும் கேள்விகளுக்கேல்லாம் விடையளிப்பதில்லை, உணர்வற்று ஜடம் மாதிரி இருக்கிறான், பைத்தியம் போலவும் நடந்து கொள்கிறான். நீங்கள் அவனை குணப்படுத்த வேண்டும்' என வேண்டிக் கொண்டார்.

தன் தகப்பனாருடன் அந்த பிள்ளையும் சங்கரரை வந்தனம் செய்து கொண்டான், ஆனால் அவன் நமஸ்கரித்து விட்டு எழுந்திருக்கவில்லை. 'உடனே சங்கரர், அவனிடம், 'நீ யார்? உன்னுடைய பெயர் என்ன? எங்கிருந்து வருகிறாய்? நீ ஏன் ஜடமாக இருக்கிறாய்' எனக் கேள்விகளைக் கேட்டார்.

தயக்கமேதும் இல்லாமல் அந்தப் பிள்ளை, 'நான் யார் என்பதை நானும் தீவிரமாக யோசித்துக் கொண்டிருக்கிறேன். இந்த சரீரம் நான் இல்லை என்று புரிகிறது. ஆனால் இந்த சரீரமோ எனக்கு ஜடம் போல் காட்சியளிக்கிறது. நான் அழியாதவன். என்றும் நிலைத்து இருப்பவன்' என பொருள்பட ஒரு ஸ்தோத்ரமே ஒப்பித்து விட்டான். (ஹஸ்தாமலக ஸ்தோத்ரம் என்று ப்ரசித்தியானது).

***52. அந்த பிள்ளையின் பெயர் என்ன? சங்கரர் சூட்டிய பெயர் என்ன? பிறகு சங்கரர் அவனை தனது சிஷ்யராக்கிக் கொண்டாரா?***

சித் ஸுகர் அந்த பிள்ளையின் பெயர் 'பிருத்வீதரர்' எனக் கூறுகிறார். சங்கரர் அவருக்கு ஹஸ்தாமலகர் என்று பெயர் சூட்டினார். உள்ளங்கை நெல்லிக் கனி போல் ஆத்ம ஸ்வருபத்தை உணர்ந்தவர் என்று கருதியதால் அந்த பெயரை சூட்டினார். (ஹஸ்தம் = கை; ஆமலகம் = நெல்லிக்கனி). மேலும் சங்கரர் தனது வலது கையை (ஹஸ்தம்) அவரது தலைமீது வைத்து ஆசிர்வதித்தார். அதுவே ஹஸ்த தீக்க்ஷையாக கருதப்பட்டது. (சந்நியாச தீக்ஷை).

ஹஸ்தாமலகரின் தகப்பனாரான ப்ரபாகரரிடம், 'உங்கள் மகன் பூர்வ ஜன்மத்தில் ஆத்ம ஞானம் பெற்றவன். இவனால் உங்களுக்கு பயன் ஏதும் இல்லை. அதனால் என்னுடன் அனுப்பி விடுங்கள்' என அவரிடம் கேட்டு, தனது சிஷ்யராக்கி கொண்டார்.

***53. சங்கரரோடு நான்கு சிஷ்யர்கள் இருந்தார்கள் அல்லவா? அந்த நாலாவது சிஷ்யர் யார்? அவர் என்ன அதிசயத்தக்க செயலை செய்தார்?***

நான்காவது சிஷ்யரின் பெயர் கிரி என்பதாகும். அவர் குரு பக்தி அதிகம் கொண்டவர். அவர் தனது நேரத்தையெல்லாம் குருவுக்கு கைங்கர்யம் செய்வதிலேயே செலவழிப்பார். மற்றும் வீட்டு வேலைகள் அனைத்தையும் செய்வார். அதனால் மற்றவர்கள் இவரை அந்த அளவு படிப்பில் நாட்டம் இல்லாதவர் எனக் கருதினர்.

ஒரு நாள் பாடம் ஆரம்பிக்கும் நேரம். கிரி பாடத்திற்கு வந்து சேரவில்லை. குரு சங்கரர் கிரி வருவதற்காக் காத்திருந்தார். மற்றவர்களுக்கு பொறுமையில்லை. அவர்கள் பாடம் படிக்க ஆசைப்பட்டனர். அதனால் குருவை பாடம் ஆரம்பிக்க சொல்லி துரிதப்படுத்தினர். 'கிரி வரட்டும், அவன் வந்தவுடன் பாடத்தை

ஆரம்பிக்கலாம்' என சங்கரர் அவர்களுக்கு பதில் சொன்னார். ஆனால் சஹ மாணவர்கள், 'அவன் பாடத்தைக் கேட்டு என்ன புரிந்துக் கொள்ளப் போகிறான்? நமது காலம் விரயமானது தான் மிச்சம். அவனுக்கு எந்த ப்ரயோஜனும் ஏற்படப் போவதில்லை' என்று கிரியின் மதிநுட்பத்தை குறைவாக எடைப் போட்டு வெளியில் குரு எதிரில் சொல்ல முடியாமல் தங்களுக்குள் முணுமுணுத்துக் கொண்டனர்.

குரு சங்கரர் இதையெல்லாம் அறியாதவரா? அவர் தனது அநுக்ரஹத்தால் ஒரு அதிசயத்தை நிகழ்த்தினார். யார் ஒருவரை மற்ற சிஷ்யர்கள் மதி நுட்பம் குறைந்தவர் என நினைத்தார்களோ, அவர் (கிரி), மிகவும் கடினம் என்று கருதப்படும் 'தோடகம்' என்னும் சந்தத்தில் குருவின் மஹிமையைப் பாடிக் கொண்டே வந்து குருவை நமஸ்கரித்தார். மற்ற சிஷ்யர்களை அது ஆச்சர்யத்தில் ஆழ்த்தியது. அவரின் புலமையையும் கவித்துவத்தையும் எண்ணி வியந்தனர். அன்று முதல் அவர் (கிரி) தோடகாசார்யர் என அழைக்கப்பட்டார், அவர் பாடிய எட்டு ஸ்லோகங்களும் 'தோடகாஷ்டகம்' என்ன மிகவும் ப்ரசித்தியை பெற்றது. இன்றும் ஆதி சங்கரரின் பூஜை முடிந்த பிறகு தோடகாஷ்டகத்தை சொல்லிய பின்னர் தான் குருவுக்கான பூஜை சம்பூரணமாகிறது. இந்த சம்பவம் குருவின் அநுக்ரஹத்தால் பூரண ஞானம் பெற்று எதையும் அடைய முடியும் என்பதற்கான ஒரு சிறந்த எடுத்துக்காட்டு.

### *54. இது போலவே மற்ற சிஷ்யர்களுக்கும் சங்கரர் அநுக்ரஹம் பெற்று நூல்கள் இயற்றினார்களா? அந்த விவரங்கள் என்ன?*

சுரேஸ்வராச்சாரியார் சங்கரரின் அத்வைத கருத்துகளை ப்ரதிபலிக்கும் கண்ணாடி போல் 'நைஷ்கர்மசித்தி' என்னும் சிறந்த நூலை இயற்றினார். மேலும் அவரை சங்கரர், 'தான் எழுதிய தைத்தரீய உபநிஷத்தின் பாஷ்யத்திற்கும், ப்ருஹதாரண்ய உபநிஷத்தின் பாஷ்யத்திற்கும்' வார்த்திகம் எழுத பணித்தார். அவ்வாறே அந்த இரு உபநிஷத்துக்களுக்கான பாஷ்யங்களுக்கு வார்த்திகமும், சங்கரர் இயற்றிய தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரத்திற்கு 'மானசோல்லாஸம்' என்கிற உரையும் சுரேஸ்வராச்சாரியார் எழுதினார். வார்த்திகம் என்பது மூல நூலில் கூறப்படாததையும், மாறுதலாக கூறப்பட்டதையும் விவாதிக்கும் ஓர் ஆக்கபூர்வ அலசலாகும்.

பத்மபாதர் ப்ரஹ்ம சூத்ர பாஷ்யத்திற்கு விளக்கம் எழுதினார். முதல் பாகம் ஐந்து பாதங்களைக் கொண்ட 'பஞ்ச பாதிகா' என்பதாகும். இரண்டாவது 'வ்ருத்தி' எனப்படும் சற்று எளிது என்று சொல்ல முடியாத விளக்க உரை ஆகும்.

***55. அன்னைக்கு வாக்கு கொடுத்தபடி அவரது அன்னையின் அந்திம சம்ஸ்காரத்தை சங்கரர் செய்தாரா? ஒரு சந்நியாசி சம்ஸ்காரம் செய்வதை வைதிகர்கள் ஒப்புக்கொண்டார்களா? தங்களது ஒத்துழைப்பையும் கொடுத்தார்களா?***

தனது யோக சக்தியால் அன்னையின் இறுதி காலத்தில் காலடி சென்றார். தாய் முக்தி பெற வேண்டும் என சிவனை துதித்தார். க்ருஷ்ணாஷ்டகம் பாடி அன்னையின் கண்களுக்கு க்ருஷ்ணனை புலனாகச் செய்தார்.

ஆர்யாம்பாள் சடலத்திற்கு சந்நியாசியான சங்கரர் அந்திம க்ரியை செய்வது அவ்வூரில் உள்ள உற்றார் உறவினர் வைதிகர்கள் யாருக்கும் சரியானதாக தோன்றவில்லை. தகனம் செய்ய அக்னி கூட மறுத்து விட்டனர். தனி ஒருவராக சங்கரர் அக்னி தேவனின் உதவியோடு அன்னையில் சடலத்தை எரித்தார். தனது துக்கத்தை போக்கிக்கொள்ள 'மாத்ருகா பஞ்சகம்' இயற்றினார். சங்கரர் இயற்றிய துதிகளில் இது ஒன்றுதான் தனி ஒரு மனிதரை குறித்து இயற்றப்பட்டதாகும்.

***56. சங்கரர் தென்னிந்தியாவில் செய்த வைபவங்கள் என்ன? தென்னிந்தியாவில் அருள் பாலித்துக் கொண்டிருக்கும் எந்தெந்த தெய்வங்கள்மீது அவர் ஸ்தோத்ரங்கள் இயற்றினார்?***

சங்கரர் தென்திசை நோக்கி விஜயம் செய்யும்போது அவருடன் அவரது சிஷ்யர்களும் சுதன்வா என்னும் அரசனும் உடன் சென்றனர். அவர் பாதையில் எதிர்பபட்ட அவைதிக மதங்களை கண்டித்து, வாதங்கள் புரிந்து அவர்களையும் அத்வைதத்தைத் தழுவ செய்தார். அவர் சிதம்பர க்ஷேத்ரத்தை அடைந்தார். நடராஜரை தரிசித்தார். லோக க்ஷேமத்திற்காக 'அன்னாகர்ஷண யந்த்ரத்தையும் பஞ்சாக்ஷர யந்த்ரத்தையும் அங்கு ஸ்தாபித்தார். சிவலிங்கத்தையும் ப்ரதிஷ்டை செய்தார். 'சிவலிங்கம் ப்ரதிஷ்டாப்ய சிதம்பர சபாதலே' - மார்க்கண்டேய ஸம்ஹிதை.

பிறகு மத்தியார்ஜுனம் என்று அழைக்கப்படும் திருவிடைமருதூரை அடைந்தார். அங்குள்ள பண்டிதர்கள் சங்கரரின் அத்வைதத்தை ஏற்கவில்லை. 'ப்ரஹ்மனும் ஜீவனும் ஒன்றாக இருக்க முடியாது. கடவுள் சர்வ சக்தி படைத்தவன். ஜீவனோ கடவுளுக்கு கீழ்பட்ட அசக்தன், அல்ப சக்தன். இரண்டும் எப்படி ஒன்றாக முடியும்' என வாதம் செய்தனர். சங்கரரின் வாதத்தை ஏற்க மறுத்தார்கள். சிவபெருமானே வந்து 'அத்வைதம் சத்தியம்' என்று சொன்னால் ஏற்றுக்கொள்கிறோம் என்றார்கள். அனைவரும் ஈசனது சந்நதிக்கு சென்றனர். லிங்கத்திலிருந்து ஒரு குரல் கேட்டது. 'அத்வைதம் சத்தியம்' என்று மூன்று முறை அந்த குரல் சொல்லிற்று. அதை உறுதி படுத்தும் வகையில் லிங்கத்திலிருந்து வலது கரம் தோன்றியது. அந்த கை உயர்ந்து அந்த வாக்கை ஊர்ஜிதப் படுத்தியது. அனைவரும் ஆச்சர்யத்தில் திளைத்தார்கள். சங்கரரின் மஹிமையை உணர்ந்தார்கள்.

ஜமதக்னி முனிவர் தவம் செய்த புனித பூமியான படவேடில் (வேலூருக்கு அருகே உள்ளது) சங்கரர் பாணலிங்கம் ஒன்றை ப்ரதிஷ்டை செய்ததாக சிலர் கூறுகின்றனர்.

பின்னர் காவேரிக்கரையில், திருச்சிராப்பள்ளிக்கு அருகில் உள்ள ஜம்புகேஸ்வரம் (திருவானைக்காவல்) என்னும் க்ஷேத்திரத்திற்கு விஜயம் செய்தார். உக்ரமாக இருந்த அகிலாண்டேஸ்வரி அம்மனின் காதுகளில் யந்திரத்துடன் கூடிய தாடங்கத்தை அணிவித்து உக்ரத்தை அதில் ஆகர்ஷணம் செய்து தேவியை கருணாபூரமாக மாற்றினார். அவர் இயற்றிய சௌந்தர்ய லஹரியில் 28ம் ஸ்லோகத்தில் 'லோக மாதா! உனது காதுகளில் மங்களகரமாக ஒளி வீசிக் கொண்டிருக்கும் தாடகங்களின் மஹிமையால் தான் ஆலகால விஷத்தை உண்ட பரமசிவன் உயிருக்கு எந்த ஆபத்தும் இல்லாமல் ரக்ஷிக்கப் பட்டான்' என்று குறிப்பிடுகிறார். 'கராலம் யத் க்ஷ்வேலம் கபலிதவத: காலகலனா ! ந சம்போஸ் தன் மூலம் தவ ஜனனி தாடங்க மஹிமா !! இதுபோன்ற கருத்தை வேதத்திலும் 'சிவா ருத்ரஸ்ய பேஷஜீ' என்று சொல்லப்படுகிறது. 'சிவா' என்பது அம்பிகையை குறிக்கும்.

பிறகு திருச்சிராப்பள்ளிக்கு விஜயம் செய்து சுகந்த குந்தளாம்பாள் சமேத ஸ்ரீ மாத்ருபூதேஸ்வரரை தரிசனம் செய்தார். அங்கு சௌந்தர்யலஹரியின் முதல் 41 ஸ்லோகங்களை கல்வட்டில் பொறிக்கச் செய்தார். பின்னர் ஸ்ரீ ரங்கம் சென்றார். ஸ்ரீ ரங்க

நாதனை தரிசனம் செய்து, ரங்கநாதாஷ்டகம் இயற்றினார். அதன் பின் சங்கரர் மதுரைக்கு சென்றார். அங்கு மீனாக்ஷி அம்மனை தரிசனம் செய்தார். மீனாக்ஷி பஞ்சரத்னம் என்று ஐந்து ஸ்லோகங்களால் அம்பாளை துதித்தார். மதுரையிலிருந்து ராமேஸ்வரம் சென்றார். ஆர்ப்பரித்து வரும் கடல் அலைகளை சமுத்ர ஸ்நானம் செய்ய வரும் பக்தர்களுக்கு சௌகர்யமாக இருக்க சாந்தப்படுத்தினார். ராமேஸ்வரத்திலிருந்து விநாயக க்ஷேத்ரமான தொண்டிக்கு சென்றார். அங்கு குடிகொண்டிருக்கும் விநாயகரை. கணேச பஞ்சரத்னம் இயற்றி ஸ்துதி செய்தார்.

சங்கரர் அத்வைதத்தை பரவ செய்து, தனது புத்தி ப்ரபாவத்தால் மற்ற மதங்களின் கொள்கைகளில் உள்ள குறைகளையும் மற்றும் தவறான பாதைகளையும் எடுத்துக் காட்டி, அவைகள் மக்களிடையே பரவாமல் முறியடித்தார். அதனால் மற்ற மத அதிகாரிகளுக்கு இவர் மேல் காழ்ப்பு உணர்ச்சி மேலோங்கி இருந்தது. சங்கரரை துன்புறுத்தும் நோக்கத்தோடு மாந்த்ரீகர் மூலம் (அபிசாரம்) அவருடைய எதிரிகள் (அபினவ குப்தர்) அவருக்கு உடல் உபாதைகளை ஏற்படுத்தினார்கள். திருச்செந்தூரில் குடியிருக்கும் முருகப்பெருமான் தன்னை நாடி வரும் பக்தர்களின் மனக் குறைகள் மட்டுமின்றி உடல் நோய்களையும் குணப்படுத்த வல்லவர். தனது யோக சக்தியால் சங்கரர் திருசெந்தூரை அடைந்தார். அங்கு தேவ நாகம் ஆதிசேஷன் குமரனின் திருவடிகளில் வழிபடுவதைக் கண்டார். அதனால் புஜங்கம் என்னும் நடையில் 33 ஸ்லோகங்களில் சுப்ரஹ்மண்யனின் புகழ் பாடினார். அவரது பிணியும் தீர்ந்தது. அங்கிருந்து கன்னியாகுமரி சென்று அம்பாளை தரிசனம் செய்தார்.

சென்னைக்கு அருகிலுள்ள திருவொற்றியூர் க்ஷேத்ரத்தை அடைந்தார். த்ரிபுரசுந்தரி சமேத ஸ்ரீ த்யாகராஜ ஸ்வாமியை தரிசனம் செய்தார். அங்கு குடிகொண்டிருந்த அம்பாளின் உக்ர சக்தியை ஒரு கிணற்றில் இறக்கினார், பிறகு நாடி வரும் பக்தர்களுக்கு அன்னை தனது சௌம்ய தரிசனத்தால் அருள் பாலித்தாள். அங்கு சங்கரர் 'திரிபுரசுந்தரி வேத பாத ஸ்தோத்ரத்தை' இயற்றினார்.

அங்கிருந்து 'ஸப்தகிரி' என்னும் திருவேங்கட மலையில் குடி கொண்டுள்ள ஸ்ரீநிவாசனை தரிசித்தார். அப்பெருமாளின் அழகை கண்டு ஆனந்தித்து, 'விஷ்ணு பாதாதி கேசாந்த' ஸ்தோத்ரத்தில், ஒவ்வொரு அங்கமாக வர்ணிக்கிறார். மேலும் சங்கரர் அங்கு அனைவரையும் வசீகரிக்கும் 'தநாகர்ஷண யந்த்ரம்' நிறுவினார்.

பின்பு விதர்ப்ப தேசம் வந்தார். அங்கு காபாலிகர்களுடன் வாதம் செய்து அவரகள் மனதை மாற்றி அவர்களை தனது சிஷ்யர்களாக்கி கொண்டார். அங்கிருந்து சௌராஷ்ட்ரம் சென்று அநுமல்லபுரம் அடைந்தார். அங்குள்ளவர்கள் சிவனுக்கு நாய் தான் வாஹனம் என்றும் அவைகளின் நாயகன் சிவன் (மல்லாரி) என்றும் நம்பி வழிபட்டு வந்தனர். 'ஸ்வப்ய: ஸ்வ பதிப்யச்ச வோ நம:' என்பது அவர்களின் அபிப்ராயத்திற்கு ஆதாரமாக சொல்லப்பட்டது. அவர்களிடம் வாதிட்டு சிவ ஆராதனையை மாற்றி ஏற்கவும் செய்தார்.

***57. ப்ரபஞ்சம் எப்படி பொய்யாகும்? காணும் காட்சி எல்லாம் இல்லாமல் போகுமா? ஞானேந்த்ரியங்களாலே உணர்ந்து அநுபவிப்பவை எல்லாம் எப்படி இல்லையென்று சொல்ல முடியும்? நம் கண்களால் காண முடியாத கடவுள் எப்படி சத்தியமாக முடியும்? இவ்வாறு நாஸ்திக வாதம் பேசிய சாருவாகர்களை சங்கரர் வென்றாரா?***

இந்த லோகம் சத்தியமல்ல, 'மித்யை.' அதாவது 'இது ஒரு தாற்காலிக சத்யம். நிரந்தர சத்யம் அல்ல. நம் கண் எதிரில் நீர்க் குமிழியானது உருண்டு திரண்டு உருவத்தை அடைந்தாலும், அது சொல்ப நேரமே இருந்து பிறகு ஒன்றுமில்லாமல் போகக் கூடியது'. அது போன்றது தான் இந்த உலகமும். இந்த உலகத்தில் காணும் பொருள்கள் நித்திய தன்மை இல்லாது நாசம் அடையக் கூடியவை. ஒரு பொருள் சில காலம் இருந்து பின்பு இல்லாமல் போனால் அதற்கு நாசம் என்று சொல்லப்படுகிறது. 'பாதம்' (bhadham) என்பது எப்பொழுதும் ஏற்படாத ஒன்று, உ-ம். மலடி மகன், குதிரைக் கொம்பு.

போதிய வெளிச்சம் இல்லாத சமயத்தில் ஒரு கயிறை பாம்பென்று எண்ணுகிறோம். சத்தியத்தில அங்கு பாம்பு இருக்கிறதென்று நம்புகிறோம். பாம்பென்றால் என்னவெல்லாம் செய்ய வேண்டுமோ அவைகளை செய்வதில் முனைகிறோம். எதிர்பட்டால் தாக்கவோ அல்லது காப்பாற்றி கொள்ளவோ நம்மை தயார் செய்து கொள்கிறோம். கையில் ப்ரகாசமான விளக்குடன் அருகில் சென்றதும் அது ஒரு கயிறு தான், பாம்பு அல்ல என்று புரிந்துகொண்ட பின், முதலில் பாம்பாக இருக்குமோ என்பதால் உண்மையாகவே நம்மிடம் ஏற்பட்ட பதட்டம், பீதி இருந்த இடம் தெரியாமல் போய் விடுகின்றன. அது போலவே, 'ஞானம்' ஏற்பட்டவுடன், இந்த உலகம் இல்லாமல் போய்விடும். எப்படி ஒரு இருட்டான அறையில் விளக்கேற்றியவுடன்

இருட்டெல்லாம் நொடிப் பொழுதில் மறைந்து விடுகிறதோ, அது போலவே, ஞானம் வந்தவுடன் அக்ஞானம் மறைந்து விடும்.

பூரண சத்தியமாயிருப்பது ப்ரஹ்மம். அடியோடு பொய்யானது என்பது 'அத்யந்த அஸத்.' இரண்டுக்கும் இடையில இருப்பது லோகம். இந்த லோகம் மாயை என்று சொல்லும் போது அடியோடு பொய் என்று அர்த்தமில்லை. ஏனென்றால் நடைமுறை வியவஹாரத்தில் நிஜம் போலவே இருக்கிறது. ஞானம் வந்தவுடன் லோகம் இல்லாமல் மறைந்து போய்விடுகிறது. இப்படியான தாற்காலிக நிஜத் தோற்றமே 'ப்ராதிபாஸிக சத்யம்' என்பதாகும்.

பல வேத வாக்கியங்களை ஆதாரமாகக் கொண்டும் தனது வாதத் திறமையாலும் சாருவாகர்களையும் வென்று சங்கரர் அவரது அத்வைத கொள்கைகளை அவர்களை பின்பற்ற செய்தார்.

இது போன்று ஜைனர்கள், பௌத்தர்கள், மற்றும் பல துர்வாதி மதங்களை கண்டனம் செய்து, வாதத்தில் வென்று, திருத்தி அத்வைதிகளாக்கினார்.

### *58. சங்கரர் தொடர்ந்து நிகழ்த்திய வைபவங்கள் என்ன? இந்தியாவில் அருள் பாலித்துக் கொண்டிருக்கும் எந்தெந்த தெய்வங்கள் மீது அவர் ஸ்தோத்ரங்கள் இயற்றினார்?*

சங்கரரும் அவரது சிஷ்யர்களும் யாத்திரையை தொடர்ந்தார்கள். பின்னர் த்வாதச ஜ்யோதிர்லிங்கங்களுள் ஒன்றான த்ரியம்பகேஸ்வரரை சங்கரர் தரிசித்தார். அந்தக் கோயில் நர்மதை நதிக்கரையில் பஞ்சவடிக்கு அருகில் அமைந்துள்ளது. பிறகு மஹாராஷ்டிர ப்ரதேசத்தில் பண்டரிபுரத்தில் குடிகொண்டிருக்கும் பாண்டுரங்கனை தரிசனம் செய்தார். அந்த தெய்வத்தின் பேரில் பாண்டுரங்காஷ்டகம் இயற்றினார். பரப்ரஹ்மலிங்கம் பஜே பாண்டுரங்கம் என்று ஒவ்வொரு ஸ்லோகத்தின் முடிவிலும் அவர் அமைத்தது பாண்டுரங்கனை பரப்ரஹ்மமாகவே நாம் உணர வேண்டும் என்பதற்காகவே சொல்லப்பட்டதாகிறது.

அதை தொடர்ந்து மோக்ஷபுரிகளில் ஒன்றான த்வாரகையை அடைந்தார்கள். கண்ணன் ஆட்சி செய்த அந்த புண்ணிய நகரத்தில் 'காளிகா பீடத்தை' ஸ்தாபிதம் செய்தார். இந்த பீடத்திற்கு ப்ரஹ்ம ஸ்வரூபாச்சாரியார் என்பவர் முதல் ஆச்சாரியர்.

அடுத்ததாக மற்றொரு ஜ்யோதிர்லிங்கமான ஸோமநாதரை தரிசனம் செய்தார். 'சௌராஷ்ட்ர தேசே விசதேதி ரம்யே, ஜ்யோதிர் மயம் சந்த்ர கலாவதம்சம்' என சோமநாதரை துதிக்க ஆரம்பித்து பன்னிரண்டு ஜ்யோதிர்லிங்கத்தின் உயர்வையும் ஸ்லோகங்கள் வாயிலாக எடுத்துரைத்தார். அயோத்திக்கு சென்று ஸ்ரீ ராமனை தரிசித்து 'ராம புஜங்க ப்ரியாத ஸ்தோத்ரம்' மூலமாக துதித்தார். ஸ்ரீ ராமனின் பரமபக்தரான ஹனுமனின் பேரில் 'ஹநூமத் பஞ்சரத்னம்' இயற்றினார்.

மற்றொரு ஜ்யோதிர்லிங்கமான மஹாசண்டி ஸமேத ஸ்ரீமஹா காளேஸ்வரை தரிசித்தார். அக்கோயில் உஜ்ஜயினி நகரில் அமைந்துள்ளது. அவ்வூரில் குடியிருந்த 'பட்ட பாஸ்கர்' போன்ற பிரபல பண்டிதர்களை வாதத்தில் வென்று தமது சிஷ்யரகளாக்கிக் கொண்டார்.

கண்ணன் லீலைகள் பல புரிந்த வட மதுரா, ப்ருந்தாவன க்ஷேத்ரங்களுக்கு சங்கரர் விஜயம் செய்தார். 'கோவிந்தாஷ்டகம், ஹரிஸ்துதி' இவற்றால் கண்ணன் புகழை சங்கரர் பாடினார்.

### *59. சங்கரர் காஷ்மீரம் எதற்காக சென்றார்? அங்கு என்ன விசேஷம் நடந்தது? அவர் சென்றதற்கு ஞாபகார்த்தமாக ஏதாவது இன்றும் காஷ்மீரத்தில் இருக்கிறதா?*

முன்பு காஷ்மீரத்தில் ஆன்மீகத் துறையில் வ்யாபகர்களான பல பண்டிதர்கள் இருந்தார்கள். எல்லா சாஸ்த்ரங்களிலும் பயின்ற பல அறிஞர்கள் இருந்தார்கள். தேவி சரஸ்வதிக்கு அங்கு ஒரு கோயில் இருந்தது. அந்த சாரதா தேவிக்கான கோயிலுக்கு நானகு புறமும் வாயில்கள் இருந்தன. மெத்த பண்டிதர் ஒருவர் வந்தால் அவர் வரும் திசைப் பக்கமாக உள்ள வாயில் திறக்குமாம். கிழக்கு, மேற்கு, வடக்கு என்னும் மூன்று திசைகளிலிருந்தும் பெரும் மேதைகள் வந்ததால் அந்த மூன்று பக்க நுழை வாயில்களும் அவர்களை உள்ளே அநுமதிக்கத் திறந்துக் கொண்டன. அநுமதிக்கப்பட்ட விற்பன்னர்களும் சர்வக்ஞ பீடத்தில் அமர்ந்தனர். தெற்கு திசையிலிருந்து யாரும் வராததால் அந்த வாயில் பல வருடங்களாகத் திறக்கப் படாமலே இருந்தது. அந்தக் குறையை நிவர்த்தி செய்ய சங்கல்பித்து சங்கரர் காஷ்மீரம் சென்றார்.

சங்கரரை கண்டதும் பல சாஸ்த்ர விற்பன்னர்களும், பிற மத குருமார்களும் அவரைப் பல கேள்விகளால் அவரது ஞானத்தை

சோதனை செய்தனர். அவர்களை தனது புத்தி வைபவத்தால் வாதத்தில் வென்று தனது தகுதியை நிரூபித்தார். அத்தருணத்தில் சாரதா தேவியும், 'நீர் சர்வக்ஞன்' என அசிரீரியாக கூறினாள். அந்த தெற்கு வாயிலும் திறந்து சங்கரரை சர்வக்ஞ பீடத்தில் அமர அநுமதித்தது.

அவரது ஞாபகார்த்தமாக ஸ்ரீ நகருக்கு அருகில் 'சங்கராசார்ய மலை' என்று ஒரு குன்று அவரது பெருமைக்கு எடுத்துக்காட்டாக இருக்கிறது.

***60. சங்கரர் பத்ரிகாஸ்ரமம் சென்றாரா? அங்கு அவர் நிகழ்த்திய வைபவங்கள் என்ன? இயற்றிய ஸ்தோத்ரங்கள் யாவை?***

ஸ்ரீ சங்கரர் முக்யமான பாஷ்யங்கள் எழுதச் சொல்லி பணிக்கப் பட்டார். அதனால் அவர் பத்ரிகாஸ்ரமம் சென்றார். அங்கு ப்ரஹ்மசூத்ரம், பகவத் கீதை, தசோபநிஷத் இவைகளுக்கான பாஷ்யங்கள் எழுதினார். அங்கு சங்கரர் எழுதிய 'ப்ரஸ்தான த்ரய பாஷ்யம்' வேதாந்த சாஸ்திரத்தில் தலைமை உரையாக இன்றும் கருதப்படுகிறது.

நர, நாராயணர்கள் தவமேற்கொண்ட அந்த க்ஷேத்ரத்தில் சிறிது காலம் தங்கியிருந்தார். அந்த சமயத்தில் அவரது ஸ்வப்னத்தில் ஸ்ரீமன் நாராயணன் தோன்றி, 'எனது விக்ரஹம் அலக் நந்தா நதி தீரத்தில் புதைந்துள்ளது. அதை வெளியே எடுத்து, ஒரு ஆலயம் நிர்மாணித்து, அதில் பத்ரி நாராயணராக ப்ரதிஷ்டை செய்ய கட்டளையிட்டார். சங்கரர் அந்த சிலா விக்ரஹத்தை நீரிலிருந்து வெளியே எடுத்து, ப்ரதிஷ்டை செய்தார். அங்கு தரிசனம் செய்து ஆனந்திக்கும் போது 'ஷட்பதி ஸ்தோத்ரம்' இயற்றினார்.

பிறகு விஷ்ணு ப்ரயாகை அருகில் ஒரு பீடத்தை நிறுவினார். அத்வைத தத்துவங்களை அந்த ப்ராந்தியத்தில் பரவச் செய்ய, அவரது ப்ரிய சிஷ்யரான தோடகாச்சாரியாரை முதல் பீடாதிபதி யாக்கினார். அந்த பீடம் ஜ்யோதிர் மடம் என அழைக்கலாயிற்று. அங்கு தன் குருவையும், பரம குருவையையும் ஒருங்கே வந்தனம் செய்யும் பாக்கியம் ஏற்பட்டது. அந்த தருணத்தில் 'தக்ஷிணாமூர்த்தி அஷ்டகம்' இயற்றி தன் குருமார்களை நமஸ்கரித்தார்.

***61. சங்கரர் கயிலை நாதனை தரிசிக்க கைலாசம் சென்றாரா? அவரின் எந்த சக்தியால் அது சாத்தியமாயிற்று? அங்கு***

*இயற்றிய ஸ்தோத்ரங்கள் யாவை? அங்கு நிகழ்ந்த விசேஷங்கள் என்ன?*

சங்கரர் தனது யோக சக்தியால் கைலாசம் சென்றார். அங்கு ஈஸ்வரனையும் தேவி பார்வதியையும் கண்டு களித்தார். அந்த ஆனந்தத்தில் 'உமாமஹேஸ்வர ஸ்தோத்ரம்' மூலம் அவர்கள் இருவரையும் 'நமோ நம: சங்கர பார்வதீப்யாம்' என துதித்து வணங்கினார். அதை தொடர்ந்து 'சிவபாதாதி கேசாந்த வர்ணனை ஸ்தோத்ரமும் இயற்றினார்.

ஆஸு தோஷியான சிவபெருமான் சங்கரரிடம் ஐந்து ஸ்படிக லிங்கங்களை அளித்தார். அவைகளை பூலோகத்தில் சங்கரர் ப்ரதிஷ்டை செய்தார். மேலும் சிவ பெருமான் இயற்றிய மாதா த்ரிபுரசுந்தரியின் பெருமைகளை சொல்லும் 'சௌந்தர்ய லஹரி' ஸ்தோத்ரங்கள் அடங்கிய சுவடியையும் பரமேஸ்வரன் சங்கரரிடம் கொடுத்தார். ஆனால் அங்கு வாயிலிலிருந்த நந்திகேஸ்வரன் கைலாயத்தில் இருந்து சுவடிகளை சங்கரர் எடுத்து போவதாக எண்ணி, அவரிடமிருந்து பெரும் பகுதியை பிடுங்கிக் கொண்டார். சங்கரர் மிகவும் கலக்கமுற்றார்.

ஆனால் கருணையாக அம்பாள் அசிரீரியாக, 'நந்திகேஸ்வரன் பறித்துக் கொண்ட 59 பாடல்களை நீ இயற்றி நான் கேட்க வேண்டும் என்னும் விருப்பத்தினால் செய்த லீலை தான். அதனால் அந்த 59 ஸ்லோகங்களையும் இயற்றி அந்த நூலை நீ பூர்த்தி செய்' எனக் கூறினாள். ஆக கைலாயத்திலிருந்த வந்த 41 ஸ்லோகங்கள் ஆனந்த லஹரி என்று அழைக்கப்பட்டது. அம்பாளில் சௌந்தர்யத்தை வர்ணிக்கும் சங்கரர் எழுதிய மீதிப் பாடல்கள் சௌந்தர்ய லஹரீ என அழைக்கப் பட்டது.

***62. சங்கரர் மிகவும் குளிந்த மலைப்ரதேசமான கேதாரம் மற்றும் நேபாளம் சென்றாரா? அங்கு பக்தர்கள் வழிபட என்ன செய்தார்?***

ஹரித்வாரத்தில் கங்கையில் புனித நீராடி விட்டு கேதார்நாத் சென்றார். அங்கு சிவபெருமானிடமிருந்து தான் பெற்ற ஐந்து ஸ்படிக சிவலிங்கங்களில் ஒன்றான முக்தி லிங்கத்தை கேதாரத்தில் ப்ரதிஷ்டை செய்தார். நேபாள தேசம் சென்று அங்கு வரலிங்கத்தை ப்ரதிஷ்டை செய்தார்.

### 63. தசநாமி ஸம்ப்ரதாயம் என்பது என்ன? அதை ஏற்படுத்திக் கொடுத்தவர் யார்?

ஒரு புனித நாளில் கங்கையில் நீராடும் புண்ணிய உத்சவமான கும்ப மேளா நடக்கும் சமயம் சங்கரர் ப்ரயாகை வந்திருந்தார். நமது நாட்டின் எல்லா திசைகளிலிருந்து துறவறம் மேற்கொண்ட சந்நியாசிகள் பெருமளவு வந்த வண்ணமாய் இருந்தனர். அப்படி வரும் சந்நியாசிகளின் சம்ப்ராதயங்களை திறனாய்ந்தார். ஒரு பத்து பிரிவு ஏற்படுத்தினால் அவர்கள் அனைவரும் அதற்குள் அடங்குவர் என்பதை அவர் ஆராய்வினால் தெரிந்து கொண்டார். அதனால் பலவாறாக சிதறி கிடந்த அத்துறவிகளை, அவர்கள் கடைபிடிக்கும் வழியை மனதில் கொண்டு, அவர்கள் எந்த பிரிவை சார்ந்தவர் என அடையாளம் அளித்து, முறைப்படுத்தினார். அந்த பத்து பிரிவுக்கு தசநாமி என்று பெயராயிற்று. சங்கரர் வகுத்த பிரிவுகள், 1. வன, 2.அரண்ய, 3.பாரதி, 4.சரஸ்வதி, 5. பூரி, 6. தீர்த்த, 7. ஆஸ்ரம, 8. கிரி, 9. பர்வத, 10. ஸாகர என்பனவையாகும். நாட்டிலுள்ள அனைத்து சந்நியாசிகளும் இந்த பத்து பிரிவில் ஒன்றை சார்ந்தவராக தான் இருக்க முடியும். இதில் சங்கரர் ஏற்படுத்திய மடங்களின் அதிபதிகளும் விதிவிலக்கல்ல.

### 64. இந்தியாவின் கிழக்கு பகுதிகளில் அவர் விஜயம் செய்த இடங்கள் என்ன? அவர் அங்கு நிகழ்த்திய விசேஷங்கள் என்ன?

அன்னை காமாக்ஷிக்கான கோவில் கிழக்கே அஸ்ஸாம் மாநிலத்திலும் உள்ளது. அந்த அம்மன் 'காமாக்யா:' என்று அழைக்கப் படுகிறாள். சங்கரர் அந்த ஆலயத்திற்கு சென்ற போது அன்னை உக்ரமாக இருந்தாள். சங்கரர் யந்த்ர பலத்தால் சாந்தப்படுத்தினார். நரபலி கொடுப்பது, மற்றும் விகல்பமான முறையில் அன்னையை வழிபடுவது போன்றவற்றை தடுத்து நிறுத்தினார். அங்கு உள்ள சாக்தோபசகர்கள் ஆபிசார ப்ரயோகம் செய்து சங்கரரை நோய்வாய் படுத்தினார்கள். அம்பிகையின் க்ருபையால் சங்கரரின் நோய் குணமாகியது

கிழக்கு கடற்கரையில் அமைந்துள்ள பூரி நகரில் குடிகொண்டுள்ள ஜகன்னாதரை தரிசித்தார். ஜகன்னாதாஷ்டகம் இயற்றி அந்த க்ருஷ்ணனை துதித்தார். கிழக்கு திசையை உத்தேசித்து

அங்கு ஒரு மடத்தை நிறுவினார். கோவர்த்தன மடம் எனப் பெயரிடப் பட்டது. முதல் பீடாதிபதியாக ஹஸ்தாமலகரை நியமித்தார்.

### *65. பூரி ஜகன்னாதத்தில் மடம் நிறுவிய பின்னர் சங்கரர் என்ன செய்தார்?*

சித் விலாஸீய சங்கர விஜயத்தில் பூரியில் மடம் நிறுவிய பின்னர் சங்கரர் கைலாசத்திலிருந்து கொண்டு வந்த பஞ்ச ஸ்படிக லிங்கங்களில் ஒன்றான போக லிங்கத்தை ஸ்ருங்ககிரியில் ப்ரதிஷ்டை செய்தார் எனக் கூறுகிறது. மார்க்கண்டேய சம்ஹிதையிலும் இந்த வைபவம் விவரிக்க படுகிறது.

ஸ்ரீ சங்கராசார்ய யோகி ஸ்ருங்ககிரிஸ்தான மகாதடககிலதேச: !
ஸ்ரீ சாரதாக்ய பீடே சிவலிங்கம் போகநாமகம் சக்ரே !!

அனைத்து தேசங்களிலும் தனது புனித யாத்திரையை முடித்துக் கொண்டு ஸ்ருங்ககிரி க்ஷேத்ரத்தை அடைந்தார். அங்கு சாரதா பீடத்தில் போக லிங்கத்தை ப்ரதிஷ்டை செய்தார் என காண்கிறது.

### *66. தொண்டை மண்டலத்தின் சிறப்பு என்ன? அந்த ப்ரதேசத்தின் எல்லைகள் யாவை?*

தென்னிந்தியாவில் தொண்டை மண்டலம் 'சான்றோர் உடைத்து' என்று சிறப்பாக கொண்டாடப்பட்டது. தமிழ் சங்க இலக்கியங்களில் தொண்டை மண்டலத்தின் சிறப்பு கூறப்பட்டிருக்கிறது. அங்கு சர்வ கலாசாலை இருந்ததையும் அறிஞர்கள் பலர் வாழ்ந்ததையும் குறிப்பிட்டு வழக்கில் சொல்வார்கள். தொண்டை மண்டலத்திற்கு மற்றொரு விசேஷமும் உண்டு. அங்கு அம்பாள் கனக மழை பெய்வித்தார். அதற்கு சான்றாக 'பொன் விளைந்த களத்தூர்' என்னும் கிராமம் இன்றும் உள்ளது. காஞ்சிபுரம் இந்த மண்டலத்திற்கு தலைமைப் பீடமாக இருந்தது. அங்கு அம்பாள் காமாக்ஷி இன்றும் அருள் பாலித்துக் கொண்டிருக்கிறாள். ஒரு சமயம் உக்ர சக்தியோடு திகழ்ந்த காமாக்ஷியை ஸ்ரீ சங்கரர் சாந்தியடையச் செய்து, சிலா ரூபத்தில் ஸ்ரீ சக்ரத்தை ப்ரதிஷ்டை பண்ணினார். துண்டீரம் என்னும் பெயரும் தொண்டை மண்டலத்திற்கு வழக்கில் இருந்தது.

அதன் எல்லை வடக்கே காளஹஸ்தி அருகில் ஓடும் ஸ்வர்ணமுகி (பொன்முகரி) நதியாகும். தென் திசையின் எல்லை பெண்ணையாறு. இதை பிநாகினி என்றும் அழைப்பார்கள். சிவதனுசான பிநாகத்தால் உண்டு பண்ணிய நதி. வங்காள விரிகுடா சமுத்திரம் கிழக்குப்

பக்க எல்லை. விரிஞ்சிபுரத்திற்கு அருகிலுள்ள ஒரு மகாமடு மேற்கு புறத்து எல்லையாகும். இந்த எல்லைக்குள் இருக்கும் ப்ரதேசம் தான் துண்டீரம் என்னும் தொண்டை மண்டலம்.

### *67. காஞ்சிபுரத்தின் தனி சிறப்பு என்ன? அங்கு வேறு என்ன விசேஷங்கள் நடைப்பெற்றன?*

காஞ்சிபுரம் சப்த மோக்ஷ புரிகளில் ஒன்றாகும். தென்னிந்தியாவில் அமைந்த ஒரே மோக்ஷபுரி காஞ்சிபுரமாகும். நகரேஷு" காஞ்சி என்று மஹா கவி காளிதாஸனால் போற்றப்பட்ட நகரமாகும். நகர் முழுவதும் ஆலயங்கள் நிறைந்து இருக்கும். ஷண்மதத்தினரும் வழிபட ஏற்ற உயர்வான கோவில்கள் காஞ்சி க்ஷேத்ரத்தில் உண்டு.

மேலும் ஸ்ரீ பரமேஸ்வரன் இரண்டாயிரம் வருடங்களுக்கு முன் காலடியில் ஸ்ரீ ஆதி சங்கரராக தோன்றினார் என்பதைப் பார்த்தோம். அவர் வாழ்ந்த காலம் 32 ஆண்டுகளே ஆகும். ஆனால் அந்த கால கட்டத்திற்குள் ஸேது முதல் ஹிமாசலம் வரை பாரத பூமியில் சஞ்சரித்து வேதத்தில் சொல்லப்பட்ட தர்மத்தை அனைவருக்கு உபதேசித்து சனாதன தர்மத்திற்கு ஒரு மறுமலர்ச்சியை அருளினார் என்றும் பார்த்தோம். திக் விஜய யாத்திரையின் போது அத்வைத ஸ்தாபனம் செய்தார். தர்ம பிரச்சாரம் செய்தார். இந்த தர்ம பிரச்சாரம் தொடர்ந்து, மக்களுக்கு நல்வழி காட்டி, நடத்தி செல்ல மடங்களையும் ஸ்தாபனம் செய்தார் என்றும் தெரிந்து கொண்டோம். இவைகளை முடித்துக் கொண்டு, பிறகு காஞ்சியில் ஸ்ரீ சங்கரர் தனது சிஷ்யர்களுடன் தங்கினார். அங்கிருந்து பரமதகாலானலர் முதலிய ஆறு சிஷ்யர்களை ஆங்காங்கு அனுப்பி ஷண்மதம் மற்றும் அத்வைதத்தை நிலை நிறுத்த செய்தார்.

ஷண்மத ஸ்தாபகர்களான பரமதகாலானலர் முதலிய ஆறு சிஷ்யர்களுடன் ஸ்ரீ சங்கராச்சார்யாளின் மூல விக்கிரஹம் காஞ்சி காமாக்ஷி அம்மன் ஆலயத்தில் இருப்பதை இதற்கான ப்ரமாணமாகக் கொள்ளலாம்.

### *68. காமகோடி பீடாதிபதிகள் என்னும் பிருதம் எப்படி உண்டாயிற்று?*

ஆதி சங்கரர் கடைசி சமயத்தில் காஞ்சியில் காமாக்ஷி தேவியின் சந்நதியில் காமகோடி பீடம் என்னும் ஸ்ரீ சக்ரத்தை ஸ்தாபித்த படியால், ஆசார்யாளுக்கு பிறகு அந்த மடத்தில் அவர் வழியில்

பரம்பரையாக வருகிற ஆசார்யர்களுக்கு காமகோடி பீடாதிபதிகள் என பிருதம் ஏற்பட்டது.

***69. ஸர்வக்ஞாஸ்ரமம் என்னும் ப்ரசித்தி எப்படி உண்டாயிற்று?***

அதுபோலவே ஆதி சங்கரர் பூஜை செய்த ஸ்ரீ திரிபுர ஸுந்தரி ஸமேத ஸ்ரீ சந்த்ர மௌலீஸ்வர ஆராதனத்தை, அவருக்கு பிறகு வந்த பீடாதிபதிகள் தொடர்ந்து அவிச்சின்னமாக இன்று வரை லோக க்ஷேமார்த்தம் பூஜை செய்து வருகின்றனர். ஸர்வக்ஞர்களான ஆசார்யர்கள் இவ்விதம் தங்கிய மடம் ஸர்வக்ஞாஸ்ரமம் என்னும் ப்ரசித்தியை அடைந்தது.

பின்பு பீடாதிபதியாக ஸர்வக்ஞாத்மா என்பவர் இருந்து வந்த படியாலும் காஞ்சி மடத்திற்கு சர்வக்ஞாஸ்ரமம் என்னும் ப்ரசித்தி உறுதியாயிற்று.

***70. கர்மாக்கள் அவித்யைக்கு எதிரான செயல்கள் அல்ல. அவைகள் இடையே விரோத பாவம் ஏதும் கிடையாது. அதனால் கர்மாவினால் அவித்யையை விரட்ட முடியாது (அவிரோதிதயா கர்ம நாவித்யாம் வினிர்வர்தயேத்) என்று உபதேசிக்கும் சங்கரர், ஞானத்திற்கு பூர்வாங்கம் பக்தியும் கர்மாவும் தான் என்பது போல் பக்தி பண்ண ஸ்தோத்ர பாடங்களையும், கர்மாவை அநுஷ்டிக்க சொல்லி உபதேச வாக்கியங்களையும், (வேதோநித்யமதீயதாம், தநுதிதம் கர்மம் ஸ்வநுஷ்டீயதாம்) பகவன் மானஸ பூஜையையும் ஷண்மத ஸ்தாபனத்தையும் சங்கரர் ஏற்படுத்தியதின் தாத்பர்யம் என்ன?***

நம்மிடையே நடமாடிய தெய்வத்தின் அருள்வாக்கை பார்ப்போம். 'ஆசார்யாள் கூறியதான அத்வைத சாதனை என்பது ஞானமார்க்கம் தான். இதில் ப்ரவேசிப்பவனுக்கு சித்தம் நன்றாக சுத்தமாகி, ஒரே விஷயத்தில் நிற்க கூடிய 'ஐகாக்ரதை' என்ற சக்தி ஏற்பட்டிருந்தால் தான், அவன் இந்த வழியில் சிரமமில்லாமல் போக முடியும். அழுக்கு மயமான சித்தத்தை எப்படி சுத்தம் பண்ணிக் கொண்டு ஞான யோக சாதனைக்கு போவது? ஞான யோகம் மேற்கொள்வதற்கு மனஸை ஒழுங்கு படுத்த வேண்டும் என்று சொன்னால், அலை பாயும் மனஸை எப்படி ஸ்திரமாக ஒரு விஷயத்தில் நிறுத்துவது?'

சித்தத்தை சுத்தப்படுத்துவது, ஒரு முகப்படுத்துவது என்னும் இந்த இரண்டையும் சாதித்துக் கொள்வதற்காகத் தான் எல்லாவற்றுக்கும் முந்தி, ஆரம்பத்திலேயே ஆசார்யாள் முறையே கர்மாவையும் பக்தியையும் வைத்திருக்கிறார். ஞான யோகத்தை ஆரம்பிப்பதற்கு பூர்வாங்கம் கர்ம, பக்தி யோகங்கள் என்று வைத்திருக்கிறார்.'

ஞானம் தான் முக்திக்கு நேர் சாதனம் என்று சொன்ன அத்வைத பரமாச்சாரியரான சங்கரரே நிறைய பக்தி ஸ்தோத்ரம் செய்திருக்கிறார், க்ஷேத்ராடனமும் தீர்த்தாடனமும் செய்திருக்கிறார். ஷண்மத ஸ்தாபனம் என்று ஆறு வித மூர்த்திகளின் வழிபாட்டை நிலை நாட்டியிருக்கிறார்.'

'கட்டாந்தரையாயிருக்கும் மனஸைக் கிளறி விட்டு லேசாக ஆக்குகிற உழவு தான் கர்ம யோகம். அதில் ஜலம் பாய்ச்சி ஈரிக்கப் பண்ணுவது தான் பக்தி யோகம். ஸ்வதர்மமாக அவரவருக்கும் சாஸ்திரப்படி ஏற்பட்ட கர்மாவை அப்பழுக்கில்லாமல் பண்ண பண்ண தன்னால் சித்தத்தின் அழுக்குகள் விலகிக் கொண்டே வரும்.'

'ஸ்வாமியிடம் ப்ரேமையினால் நம்முடைய மனஸ் ஒரு முகப்பட்டு நிற்க பக்தியுபாசனை சஹாயம் செய்யும். மனஸானது பக்தியால் ஒரு மூர்த்தியிடம் ஒருமுகப்பட பழகிவிட்ட பிறகு அமூர்த்தமான தத்வத்திலும் அப்படியே ஒருமுகமாகி ஆத்ம விசாரம் செய்ய முடியும். கர்மாவால் சித்த சுத்தியும், பக்தியால் சித்த ஐகாக்ரியமும் ஏற்பட்ட அப்புறம் ஞான யோகத்தில் அதிக சிரமமில்லாமல் முன்னேறலாம்.' - மஹா பெரியவா.

வேதத்தில் விதித்திருக்கும் கர்மாக்களை செய்யும் போது, வேதத்தில் காணும் உபாஸனா காண்டத்தையும் ஞானகாண்டத்தையும் அநுசரிக்க வேண்டும். ப்ரஹ்ம ப்ராப்தி தான் மனிதனின் இறுதி லக்ஷ்யம் என்பதால் கர்ம யோகத்தையும் ஞான யோகத்தையும் சேர்த்து கொண்டு, ப்ரஹ்மத்தை அடைய ப்ரயத்தன பட வேண்டும்.

'ஸர்வம் கர்மாகில பார்த்த ஞானே பரிஸமாப்யதே'

– கண்ணன் கீதையில்.

### *71. நாம் துக்கத்தைத் தவிர்த்து ஆனந்தமாக இருக்க வேண்டு மென்றால் என்ன மார்க்கம் சொல்லப்பட்டிருக்கிறது?*

வாழ்க்கையில் நாம் காணும் ஒரு சாதாரண நிகழ்ச்சி. ஒவ்வொரு மனிதனும் ஏதாவது ஒரு பொருளின்மீது அபரிமிதமான ஆசையை

வைக்கிறான். அவன் ஆசை வைத்திருக்கும் பொருள் ஒரு நாள் அழியக்கூடியது என்னும் எண்ணம் அப்போது ஏற்படுவதில்லை. அப்படி அதன் ஸ்வபாவத்தில் அது அழியும்போது அது அவனுக்கு பெருத்த துக்கத்தை விளைவிக்கிறது. ஆகையால் அநித்தியமான அழியும் பொருளின் மீது ஆசை வைத்தால் கடைசியில் துக்கம் தான் மிஞ்சும் என்பதை அவன் உணரவேண்டும்.

துக்கத்திலிருந்து விடுபட வேண்டுமானால் எப்பொழுதும் நித்தியமான சத் சித் ஆனந்த ரூபமான ப்ரஹ்மத்தின் மேல் ஆசை வைக்க வேண்டும். தொடர்ந்து அன்பு செலுத்த வேண்டும். பக்தி பண்ண வேண்டும். ஆரம்பத்தில் த்வைதமாக நீ வேறு நான் வேறு என்ற எண்ணத்தில் ஒட்டியும் ஒட்டாமலும் இருந்தாலும் போக போக பக்தி முற்றியபின் வேற்றுமை காணாமல் போய்விடும். ஜீவேஸ்வர பேதம் அடியோடு போய்விடும். ஆனந்தம் ஒன்றே நிறைந்திருக்கும். அனுபவிப்பவர், அனுபவிக்கும் பொருள் என இரண்டு இல்லாத ஒன்றான ஒரே பரமானந்தம். எல்லையில்லா ப்ரஹ்மானந்தம். ஆகவே நாம் அன்பு செலுத்த தகுதியான இடம் அழியாத தன்மை கொண்ட பரம்பொருள் ஒருவரிடம் தான். இதை நாம் நன்கு புரிந்துக்கொண்டு தவறாமல் அவரிடம் அன்பு வைக்க வேண்டும். துக்கமென்பது எள்ளளவும் நம்மை அணுகாது.

### *72. 'ஸுரேஸ்வராதி ஷட்சிஷ்ய சந்ந்யாசாஸ்ரம தாயக:' என்னும் நாமா ஆசார்யாளுக்கு எப்படி வந்தது?*

ஆதி சங்கரர் நான்கு திக்குகளிலும் சிருங்கேரி முதலிய நான்கு மடங்களை ஸ்தாபித்தார். அதனால் அவர் 'சதுர்திக் சதுராம்நாய ப்ரதிஷ்டாதா' என்னும் ப்ரசித்தி பெற்றார். நான்கு மடங்களை ஸ்தாபித்து விட்டு கடைசியில் மோக்ஷபுரியான காஞ்சிபுரத்தில் தங்கினார். அவர் தங்கின இடமும் ஐந்தாவது மடமாயிற்று. இப்படியாக அவர் ஸ்தாபித்த சிருங்கேரி, துவாரகை, பத்ரி, ஜகந்நாதம், காஞ்சி என்று ஐந்து இடங்களில் உள்ள ஐந்து மடங்களில் ப்ருத்வீதரர், பத்மபாதர், தோடகர், ஹஸ்தாமலகர், ஸர்வக்ஞாத்மா என்ற ஐவரை பீடாதிபதிகளாக்கினார். எல்லா மடங்களுக்கும் அத்யக்ஷகராக ஸுரேஸ்வராச்சாரியரை நியமித்தார். அதனால் ஸுரேஸ்வராதி ஷட் சிஷ்ய ஸந்ந்யாசாஸ்ரம தாயக: என்று பெயரும் பெற்றார்.

***73. ஸ்ரீ சங்கரரை குறிப்பிடும் போதெல்லாம் 'ஆச்சார்யாள்' என்றும் குறிப்பிடப்படுகிறதே! ஆச்சார்யர் என்பவர் யார்?***

சிக்ஷை, வியாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம், கல்பம் என்று ஆறு அங்கங்கள். புராணம், தர்ம ஸாஸ்த்ரம், மீமாம்சை, நியாய விஸ்தரம் என நான்கு உபாங்கங்கள். ரிக், யஜுஸ், சாம, அதர்வண என நான்கு வேதங்கள். இவையனைத்தையும் சேர்த்து ஸாஸ்த்ரங்கள் என சொல்லப்படுகிறது. ஒருவர் இந்த ஸாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட கருத்தை தீர்க்கமாக விசாரம் செய்து, ஆராய்ந்து, மனதில் தீர்மானித்துக் கொள்ள வேண்டும். அவருடைய கருத்தானது சாஸ்த்ர ப்ரமாணங்களுக்கு முரண்பாடாக அல்லது எதிர்மறையாக இருக்க கூடாது. அவருடைய செயலும் அவர் கொண்ட தீர்மானத்தை அனுசரித்ததாக இருக்க வேண்டும். வாக்கால் பிறருக்கு அவர் செய்யும் உபதேசமும் மாறுபட்டு இருக்கக் கூடாது. ஆக மனதால் தீர்மானிக்கப்படும் 'ரிதமும்,' வாக்கால் உபதேசிக்கும் 'சத்யமும்,' அவர் அனுஷ்டிக்கும் 'தர்மமும்,' ஒன்றாகவே இருக்க வேண்டும். அவரே ஆச்சாரியர்.

ஸ்ரீ சங்கரர் எழுதிய பாஷ்யக் க்ரந்தத்தில் வேதங்களில் சொல்லப்பட்ட ப்ரமாணங்களுக்கு விரோதம் இல்லாமலும், வேதக் கருத்துகளுக்கும் விரோதம் இல்லாமலும், அவர் நடந்து கொண்டது சொல்வது போலவே இருந்ததாலும், அவைகளையே லோகத்திற்கு உபதேசம் செய்து வந்ததினாலும், சந்தேகம் நீக்கமற அவர் ஆச்சார்யர் ஆனார். அவரே 'ஜகத்திற்கும்' ஆச்சாரியர், அவரே 'ஜகத்குரு.'

***74. 'நமாமி பகவத்பாதம் சங்கரம் லோகசங்கரம்' என்று சங்கரரை வணங்குகிறோம். சங்கரம் என்னும் சொல் க்ஷேமத்தை கொடுத்தவர் என்பதை குறிக்கிறது. லோக சங்கரம் என்றும் சொல்லப்படுகிறதே, உலகத்திற்கு பகவத்பாதர் எந்த விதத்தில் க்ஷேமத்தை தந்தார்?***

வித்யாமசேஷ ஜகதாம் சுகதாமதாத்ய: !
தம் சங்கரம் விமலபாஷ்யக்ருதம் நமாமி !!

இவ்வாறாக இந்த கேள்விக்கான பதிலை ப்ரகாசாத்மா ஸ்ரீ சரணர் கூறுகிறார். அதாவது 'ப்ரஸ்தானத்ரயத்திற்கு குற்றமேதும் இல்லாத பாஷ்யத்தை கொடுத்தவர். அதன் மூலம் எல்லா ஜகத்திற்கும்

சுகத்தை கொடுக்கக்கூடிய வித்யையை கொடுத்தருளியவர். அதனால் சங்கரர் லோகசங்கரர் ஆகிறார்.

உபனிஷத்துக்களை ஆதாரமாகக் கொண்ட அத்வைத தர்சனத்தால் சம்சார பயம் அடியோடு விலகி விடும். சாஸ்வதமான பரமானந்தம் அங்கு ஏற்பட்டு விடும்.

வித்தைகள் இரண்டு விதமாக இருக்கின்றன. ஒன்று லோகத்தில் மக்களிடையே விரோதத்தை உண்டு பண்ணும். அந்த வித்தையானது மக்களின் சாந்தியைக் கெடுக்கும். ஆனால் இரண்டாவது வித்தை சாமரஸ்ய பாவத்தை மக்களிடையே வளர்க்கும். அந்த வித்தையே சாந்தியை கொடுக்கும். சுகத்தையும் கொடுக்கும்.

த்வைத சித்தாந்தங்களை கல்பனா ஸாரமாக அவைகளில் அபிருசி கொண்டு மக்கள் ஏற்றுக்கொள்கின்றனர். ஒரு த்வைதியின் சித்தாந்தத்தை அடுத்த த்வைதி ஒப்புக்கொள்வதில்லை. ஒரு சித்தாந்தி தன் சித்தாந்தத்தை ஸ்தாபிக்க அடுத்த த்வைதியை கண்டிக்கிறார். இப்படி ஒருவருக்கொருவர் கண்டிப்பதால் அவர்களிடையே த்வேஷ மனப்பான்மை ஓங்கி, கடுமையான விரோதம் உண்டாகிறது. அது போலவே தேவதைகளின் உபாசனையிலும் சிவன், விஷ்ணு என பேதங்கள் ஆக்ரமித்து பூசல்கள் உண்டாகி அங்கும் அமைதியில்லாத நிலை ஏற்படுகிறது.

ஆனால் உபநிஷத்துக்களை ஆதாரமாகக் கொண்ட அத்வைத சித்தாந்தத்தை ஒப்புக் கொண்ட அத்வைதிக்கு த்வைதிகளிடம் விரோதம் கிடையாது. ஏனென்றால் அவித்யா வசத்தால் ஒருவர்தான் ஏற்றுகொண்ட த்வைத நிலையில் இருந்துக் கொண்டே அத்வைத சாக்ஷாத்காரம் என்ற வித்தையை அதற்கான ஸாதனங்களை அநுஷ்டித்து அடைய முடியும். லக்ஷியத்தை அடைய சாதனங்கள் வேண்டுமாகையால் த்வைதம் அத்வைதத்திற்கு உபகாரகம்.

அதிகாரி பேதத்தால் த்வைத மதங்கள் பல இருந்தாலும், அந்த மார்க்கத்தை அநுஷ்டிப்பவர்கள் அத்வைதம் தான் உண்மையானது என்று புரிந்துக் கொண்டு அங்கிருந்தே (த்வைதத்திலிருந்தே) கிரமமாக ஞானமார்க்கத்தால் கரையேறலாம் என்பதை அத்வைதம் போதித்து வருகிறது. எந்த மார்க்கமாக இருந்தாலும் அத்வைத ஞானம் மூலமாக லக்ஷியத்தை அடைய முடியும் என்பதால் த்வைதிகளுக்குள்ளே இருக்கிற விரோதபாவத்தையும் அத்வைதம் போக்குகிறது. ஆதலால் சாமரஸ்யத்தை உண்டு பண்ணி சாந்தி ஏற்படும்படி செய்வதால்

அத்வைதம் லோகத்திற்கு சுகத்தையும் சாந்தியையும் கொடுக்க வல்லது.

மேலும் சங்கரரைப் பற்றிய ப்ரசித்தமான ஸ்லோகம், 'ஆத்ம வித்யோபதேசை: த்ராதும் லோகான்' - லோகத்தை உய்யவிக்க ஆத்ம வித்யையை போதித்தவர் - என்பதாகும்.

ஆதலின் அத்வைத வித்யை லோகத்திற்கு க்ஷேமகரமானது. அந்த வித்யையை போதித்த சங்கரர் லோக சங்கரர்.

*75. நாம் சங்கரரை குறிப்பிடும்போது, 'நமாமி பகவத் பாத சங்கரம்' 'ஸ்ரீ சங்கர பகவத் பாதாய நம:' என்று 'பகவத் பாதர்' என்னும் அடைமொழியை ஏன் எப்பொழுதும் சொல்கிறோம்?*

'பாதம்' என்னும் சொல் கால்களை அதாவது சரண கமலங்களை குறிக்கும். பகவானின் பாதாரவிந்தங்களை அதாவது பாத தாமரைகளை அடைந்தவரை பகவத் பாதர் என்று குறிப்பிடுகிறோம். இறைவனடிகளை சேர்ந்தவர் என்பதாகும். ஆசார்யாள் ஸகுண ப்ரஹ்மத்தை சொல்லும் போது 'நாராயணன்' என்று குறிப்பிட்டிருக்கிறார். அவரின் அந்த ஏற்பாட்டின் பேரில் தான் சந்நியாசிகள் யார் அவர்களை நமஸ்காரம் செய்து வந்தனம் பண்ணினால் 'நாராயண, நாராயண' என்றே ஆசிர்வதிக்கின்றனர். நாரத மஹாரிஷியின் நாவை விட்டு அகலாதது இந்த 'நாராயண' நாமம்.

அத்வைத பாஷ்யங்களிலும் ப்ரகரண க்ரந்தங்களிலும் ஞான மார்கத்தை சொன்ன ஆசார்யாள், அதே லக்ஷியத்திற்கு சரணாகதியை வழியாக சொல்கிறார். தானே ஒரு பக்தராக இருந்து நமக்கு வழியும் காட்டுகிறார். அவரது விஷ்ணு ஷட்பதீயில், 'சரணம் கரவாணி தாவகௌ சரணௌ' - அதாவது 'உன் இணையடிகளில் சரணாகதி செய்கிறேன்' என்கிறார். மேலும் அந்த ஸ்லோக ஆரம்பத்தில் 'நாராயண கருணாமய' என்று 'கருணைக் கடலான பகவான் நாராயணன் சரணாகதனை கட்டாயம் ரக்ஷிப்பான்' என்று இறைவனின் பாத தாமரைகளை அடைந்தவராக நமக்கு உணர்த்துகிறார்.

ஸுப்ரஹ்மண்ய புஜங்கத்தில், 'ஸ்கந்தனே! பத்மத்தில் வண்டு மொய்த்து கொள்கிறது போல் 'பவ வினையால் தவிக்கும் எனது

மன வண்டானது உன் பாத பத்மங்களில் சதா ரமித்துக் கொண்டிருக்கட்டும்' என் வேண்டுகிறார். 'மந: ஷட்பதோ மே பவ க்லேச தப்த: ஸதா மோததாம் ஸ்கந்த தே பாத பத்மே' (ஸு.பு.9). சௌந்தர்ய லஹரியிலும் 'என் ஜீவானானது உனது பாத பத்மத்தில் புதைந்து கிடக்கட்டும்' என்று அம்பாளிடம் ப்ரார்த்திக்கிறார். 'நிமஜ்ஜன் மஜ்ஜீவ கரண சரண ஷட்சரணதாம்' (சௌ.ல.90). 'உன்னிடமிருந்து வேறென்ன எனக்கு வேண்டும். உன் பாதக் கமலங்களில் லயித்திருக்கும் பக்தி ஒன்றை மட்டும் அருள்வாய்' என்று சிவானந்த லஹரியில் கேட்கிறார். 'மம தாஸ்யஸி கிம் கிமஸ்தி சம்போ ! தவ பாதம்புஜபக்திமேவ தேஹி' (சி.ல.87). 'செல்வங்களை தரும் உன் பாதத்தாமரைகளில் என் மனதை நிலைநிறுத்தி த்யானம் செய்ய அருள்வாய்' என த்ரிபுரசுந்தரி வேதபாத ஸ்தோத்ரத்தில் வேண்டுகிறார். 'ஸ்தாஸ்மாகம் த்யாயதாம் த்வத்பதாப்ஜம் உச்சதிஷ்ட மஹதே சௌபகாய' (தி.வே.பா.ஸ்.36). மேலும் அந்த ஸ்தோத்ரத்தில், 'ஓ மனமே! இப்படி சம்சாரமென்னும் துன்பக் கடலில் மூழ்கி தவிக்கிறாயே! இதிலிருந்து விடுபட நான் ஒரு உபாயம் சொல்கிறேன். தேவியின் பாதக் கமலங்களை மிகவும் சுருக்கமான ஓம் என்னும் ஒரு அக்ஷரத்தினால் பூஜை செய்.' என்கிறார். 'ரே ரே சித்த த்வம் வ்ருதா சோகசிந்தௌ மஜ்ஜஸ்யந்தர்வச்ம்யுபாயம் விமுக்த்யை! தேவ்யா: பாதௌ பூஜயைகாக்ஷரேண தத்தே பதம் சம்க்ரஹேண ப்ரவீம்யோம் !! (தி.வே.பா.ஸ்.53).

இப்படியாக இறைவனது பாதாரவிந்தங்களின் மஹிமையை பலவிதத்திலும் நாம் அறிய தெரிவிக்கிறார். ஆக பகவத் பாதர் என்பது அவர் ஒரு பக்தனாக இறைவனது இணையடிகளில் (ஸகுண ப்ரஹ்மத்தை) அடைந்தவர் என்பதை குறிக்கும்.

### *76. சங்கரரை துதிக்கும் இந்த நாமாவளி எப்படி, யாரால் உண்டாயிற்று?*

காஞ்சி க்ஷேத்ரத்தில் அவருடன் தங்கிய சிஷ்யர்கள் தங்களது குருவை பக்தியுடன் செய்த ஸ்துதியே இந்த நாமாவளியாக ப்ரசித்தி அடைந்தது.

இந்த ஸ்துதியில் ஆசார்யாள் செய்த, அத்வைத ஸ்தாபனம், ஷண்மத ஸ்தாபனம், வைதிகமான வர்ணாஸ்ரம ப்ரதிஷ்டை, பரமஹம்சா (ஆ) ஸ்ரமோத்காரணம், எழுபத்திரண்டு துர்மதங்களில் நிரஸனம், ஸ்ருதி, ஸ்ம்ருதி, புராணங்கள் இவைகளின் ப்ரமாண்ய

ஸ்தாபனம் முதலிய ஸ்ரேஷ்டமான காரியங்கள் சொல்லப் பட்டிருக்கின்றன.

மேலும் ஸ்ரீ பரமேஸ்வரனுடைய அவதாரமான ஸ்ரீ சங்கரர், தேவி ஸரஸ்வதியை வாதத்தில் வென்று கூடவே சிருங்கேரிக்கு அழைத்து செல்லுதல், பரகாய ப்ரவேசம் செய்தல், கைலாஸ யாத்திரை செய்து ஐந்து ஸ்படிக லிங்கங்களை கொண்டு வருதல், காஞ்சியில் காமகோடி பீடம் என்று ப்ரசித்தியை உடைய ஸ்ரீ சக்ரத்தை ப்ரதிஷ்டை செய்தல், திருவானைக்காவல் ஸ்ரீ அகிலாண்டேஸ்வரி க்ஷேத்திரத்தில் ஸ்ரீ சக்ராத்மகமான தாடகங்களை அம்பாளுக்கு சாத்துதல், ப்ரஹ்ம சூத்ரம், உபநிஷத், கீதை மூன்றிற்கும் பாஷ்யம் செய்தல், ஸௌந்தர்ய லஹரி போன்ற பல உயர்வான ஸ்தோத்ர ரத்னங்களை இயற்றுதல், ஸ்ரீ வேத வ்யாஸரை தரிசித்து அநுக்ரஹம் பெறுதல், பதஞ்சலி சிஷ்யரும், அவரது சாபத்தால் ப்ரஹ்ம ராக்ஷஸ உருவம் பெற்று, பிறகு சாபம் நீங்கி, கௌடபாத முனிவராய் விளங்கிய தம் பரமாச்சார்யாளை கண்டு சேவித்தல், பிறகு அவருடைய மாண்டுக்ய காரிகைக்கு தாம் இயற்றிய பாஷ்யத்தை அவரிடம் காண்பித்து ஆசி பெறுதல், மண்டன மிஸ்ரரை ஜெயித்து அவருக்கு சந்நியாசம் வழங்குதல், பத்ம பாதர், தோடகர், ஹஸ்தாமலகர் இவர்களால் பூஜிக்கப் படுதல், ஸுரேஸ்வரருக்கு பீடாதிபத்யம் வழங்குதல், ஆறு சிஷ்யர்களுக்கும் பீடாதிபத்யத்திற்கு ஏற்ற சந்நியாசாஸ்ரமத்தை ஸ்வீகரிக்க செய்வது, ஜகத்குருவாக ராஜ லக்ஷணங்களோடு விளங்குதல், நான்கு திக்குகளிலும் நான்கு ஆம்நாயங்களை ப்ரதிஷ்டை செய்து, காஞ்சியில் சர்வக்ஞ பீடாரோஹணம் செய்தல் முதலிய வைபவங்களும் அஷ்டோத்ரங்களில் காணப் படுகின்றன.

77. ***ஆச்சாரியாளை சங்கர ஜயந்தி புண்ணிய தினத்தில் நினைத்து நன்றியுடன் பூஜை செய்வது என்பது ஸ்ரீ பரமேஸ்வரனை ஸ்மரணை செய்து அவனை ஆராதித்தற்கு ஈடாகும். இது எந்த வகையில் உண்மை?***

ஆதி சங்கரரைப் பற்றி அவரது சிஷ்யர தோடகர் எட்டு ஸ்லோகங்கள் (அஷ்டகம்) பாடியிருக்கிறார். அதில் 'தாங்கள் தான் ஈஸ்வரன்' 'தாங்களே காளை மாட்டுக் கொடியுள்ள பரமேஸ்வரன்' என்று அதில் கூறியிருக்கிறார். பக்கத்தில் இருந்து பணி செய்பவர்களுக்கு தன் எஜமானனிடம் பக்தி வருவது சற்று ஸ்ரமம். No man is a Hero to his own Valet. ஆனால் தோடகர் ஆச்சார்யாளுக்கு

பக்கத்தில் இருந்துக் கொண்டு அவருக்கு பணிவிடை செய்து கொண்டிருந்தும் தம்முடைய பக்தியின் அனுபவத்தை சொல்லியிருக்கிறார். ஆகவே ஸ்ரீ ஆச்சார்யாள் பரமேஸ்வரனைத் தவிர வேறு அல்ல என்பதை தெளிவுபடுத்துகிறது. அதனால் உறுதியாக சங்கர ஜயந்தி புண்ணிய தினத்தில் ஆச்சார்யாளை ஸ்மரித்து மஹோத்சவமாக கொண்டாடுவது பரமேஸ்வரனை ஸ்மரணை செய்வது தான்.

***78. ஸ்ரீ சங்கர ஜயந்தியை எப்பொழுது யாரால் கொண்டாடப் படவேண்டும்?***

ப்ரதி வருடமும் வைசாக (வைகாசி) மாதத்தில் சுத்த (சுக்ல பக்ஷம்) பஞ்சமி (திதி) தினத்தன்று தவறாமல் ஷோடசோப சாரங்களுடன் பூஜை செய்ய வேண்டும். ஸ்ரீ சங்கர பகவத்பாதரின் ஜயந்தி மஹோத்சவம் ஒவ்வொரு கிராமத்திலும் நகரத்திலும் பாரத தேசத்தில் எல்லா பாகங்களிலும் வெகு விமரிசையாகக் கொண்டாடப் படவேண்டும். பாரத தேசத்திற்கும் சநாதன தர்மத்திற்கும் அவர் செய்துள்ள பெரும் சேவைக்கு நாம் அனைவரும் அவரை மறக்காமல் அவர் ஜயந்தியை கொண்டாடி நம்மை க்ருதார்த்தர்களாக செய்து கொள்ள வேண்டும். அவரின் அவதாரம் ஏற்படாமல் இருந்திருந்தால் வைதிக தர்மம் சீர்குலைந்து போயிருக்கும். தர்மத்தின் மூலாதாரமான வேதமே ப்ரமாணம் என்பதே பறந்து போயிருக்கும். அவைதிகமான மதங்களும் சடங்குகளும் தலை விரித்தாடியிருக்கும். நாஸ்திக வாதம் வலுவடைந்து தேவதாராதனை என்பதே என்னவென்று தெரியாமல் போயிருக்கக் கூடும். ஆன்மீகம் குன்றி போயிருக்கும். மக்கள் வாழ்வில் சன்மார்க்கம் தெரியாமல் உயர்ந்த மனிதப் பிறவி கிடைத்தும் தங்களை மேன்மைப்படுத்தி கொள்ள வழி தெரியாமல் தவித்திருப்பார்கள். நம் கஷ்டங்களை நிவர்த்தி செய்து கொள்ள தெய்வத்தைப் ப்ரார்த்தனை செய்து மன நிம்மதியைப் பெறுகிறோம். எடுத்த ஜன்மாவைக் கடைத்தேற உபாசனா மற்றும் ஞான மார்க்கத்தில் ஈடுபடுகிறோம். இவற்றிற்கெல்லாம் வழி வகுத்துக் கொடுத்த மஹானை நாம் மறக்கலாமா? செய் நன்றி மறப்பது தகாத செயல் என்று நாம் அறியாபத விஷயமல்லவே!

பூஜா க்ரமத்தை சிலர் வெளியிடும் புத்தகங்களில், நாமாவளியில் ஒரு சில பாட பேதங்கள் இருக்கின்றன. அவைகள் பின்னால் ஏற்பட்டிருக்க கூடும் என சில அறிஞர்கள் கருதுகின்றனர். நாமாக்களுக்குள் ஒன்றுகொன்று முரண்பாடாக இருப்பதால் அவைகள்

பின்னால் சேர்க்கப்பட்டவை என அபிப்ராயப்படுகின்றனர். தொன்று தொட்டு ப்ரசித்தமாக நம்மிடையே வழக்கமாக உள்ள ப்ராசீன க்ரந்தங்களிலிருந்து இந்த அஷ்டோத்தரம் தொகுத்து கொடுக்கப் பட்டுள்ளது. இந்த அஷ்டோத்ர சத நாமாவளியால் தினம் பாராயணம், மற்றும் அர்ச்சனையும் செய்வோம். நமக்கு சன்மார்க்க வழியை காட்டுவதற்காக சிவபெருமான் எடுத்த அவதாரம் சங்கரர். நாம் தவறாமல் அவரை ஆராதிப்போம். நம் நலனில் மிகுந்த அக்கறை கொண்டு பிற்காலத்தில் அவர் காட்டிய வழி அவிச்சின்னமில்லாமல் தொடர்ந்து வர மடங்களையும், அதற்கான மடாதிபதிகளையும் நிறுவினார். அந்த ஆதி சங்கரருக்கு ஸ்ரீ சங்கர ஜயந்தியை விமரிசையாக பக்தியோடு கொண்டாடி நமது க்ருதக்ஞதையை சமர்ப்பிப்போம்.

(ஜகத்குரு பூஜ்ய ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ சந்த்ர சேகரேந்த்ர மஹாஸ்வாமிகளின் உபன்யாசங்களில் இருந்தும் சாஸ்த்ர ரத்னாகர போலகம் ஸ்ரீராம ஸாஸ்த்ரிகள் எழுதிய வியாசங்களில் இருந்தும், மற்றும் பல அறிஞர்களின் கட்டுரைகளிலிருந்தும் இந்த வெளியீட்டிற்கான விஷயங்கள் சேகரிக்கப்பட்டன. எனது சிறிய தகப்பனார் ஆசார்ய சேவா ரத்னம், சென்னை சம்ஸ்க்ருத கல்லூரியின் ஓய்வுபெற்ற ப்ரின்சிபால் ப்ரஹ்மஸ்ரீ P.V. சிவராம தீக்ஷிதரால் ப்ராசீன க்ரந்தங்களிலிருந்து தொகுத்த பூஜா கல்பத்தை சார்ந்தே பூஜாகல்பம் அமைக்கப்பட்டிருக்கிறது. இவர்கள் அனைவருக்கும் என் சிரம் தாழ்ந்த வணக்கங்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்).

சுபமஸ்து ! ஸர்வே ஜனா ஸுகினோ பவந்து!!
ஸர்வத்ர கோவிந்த நாம சங்கீர்த்தனம், கோவிந்தா, கோவிந்தா!!
நம: பார்வதி பதயே ! ஹர ஹர மஹா தேவ!

ஹர ஹர சங்கர ! ஜய ஜய சங்கர ! ஹர ஹர சங்கர
ஜய ஜய சங்கர ! ஹர ஹர சங்கர ஜய ஜய சங்கர!!

# ஸ்ரீ சங்கர பகவத் பாதபூஜை

ஸ்ரீ சங்கர ஜயந்தி மஹோத்சவம், ப்ரதி வருடமும் வைசாக (வைகாசி) மாதத்தில் சுத்த (சுக்ல பக்ஷம்) பஞ்சமி (திதி) தினத்தன்று தவறாமல் ஷோடசோபசாரங்களுடன் பூஜை செய்ய வேண்டியதாகும். ஸ்ரீ சங்கர பகவத்பாதரின் ஜயந்தி மஹோத்சவம் ஒவ்வொரு கிராமத்திலும் நகரத்திலும் பாரத தேசத்தில் எல்லா பாகங்களிலும் வெகு விமரிசையாகக் கொண்டாடப் படவேண்டும். பாரத தேசத்திற்கும் சநாதன தர்மத்திற்கும் அவர் செய்துள்ள பெரும் சேவைக்கு நாம் அனைவரும் அவரை மறக்காமல் அவர் ஜயந்தியை கொண்டாடி நம்மை க்ருதார்த்தர்களாக செய்து கொள்ள வேண்டும். நாம் என்றும் செய் நன்றி மறந்தவர்களாகக் கூடாது.

பூஜை செய்வதற்கு தீர்மானித்த இடத்தில் கோலமிட்டு அழகு செய்து, ஒரு சுத்தமான கும்பத்தில் தான்யத்தை நிறைத்து அதன் மீது தேங்காய், மாவிலை வைக்க வேண்டும். ஸ்ரீ சங்கர பகவத்பாதரின் ப்ரதிமை அல்லது படம் (சித்ரம்) ஒன்றை அந்த கும்பத்தின் மேல் சாற்றி வைக்க வேண்டும். மாவிலையாலும் புஷ்ப மாலைத் தோரணங்களாலும் அலங்காரம் செய்து கலச ஸ்தாபனம் செய்து கொள்ள வேண்டும், ப்ரதிமையில் / படத்தில் (சித்ரம்) ஸ்ரீ சங்கர பகவத்பாதரை ஆவாஹனம் செய்ய வேண்டும். அபிஷேக சமயம் ப்ரதிமையை ஒரு தட்டில் வைத்துக் கொண்டு அபிஷேகம் செய்ய வேண்டும். பிறகு துடைத்து, அலங்காரங்கள் செய்து, ஆவாஹனம், அர்ச்சனை போன்ற அனைத்து உபசாரங்களும் ப்ரதிமைக்கு / சித்திரத்திற்கு செய்ய வேண்டும். அலங்கரித்தபின் பூஜையைத் தொடங்கவும்.

**பூஜாரம்பம்**

**விக்நேச்வர பூஜை**

((முதலில் ஆசமநம் செய்யவும். கையில் புஷ்பம், அக்ஷதை எடுத்துக் கொண்டு, கீழ்க்கண்ட மந்த்ரம் சொல்லிக் குட்டுக் கொள்ளவும்)

சுக்லாம்பரதரம் விஷ்ணும் ஸஸிவர்ணம் சதுர்புஜம் !
ப்ரஸந்ந வதநம் த்யாயேத் ஸர்வ விக்நோப ஸாந்த்யே !!

'அயம் முஹூர்த்த: ஸுமுஹூர்த்தோஸ்த்விதி பவந்தோ
மஹாந்தோநு க்ருஹ்ணந்து'

என்று பெரியோர்களைப் பிராத்திக்கவும்.

'அயம் முஹூர்த்தஸ் ஸுமுஹூர்த்தோஸ்து'

என்று பெரியோர் ப்ரதிவசனம் சொல்வர்.

ததேவ லக்நம் ஸுதிநம் ததேவ
தாராபலம் சந்த்ரபலம் ததேவ !
வித்யாபலம் தைவபலம் ததேவ
லக்ஷ்மீபதே (அ)ங்க்ரியுகம் ஸ்மராமி !!

**ப்ராணாயாமம்**

'ஓம் பூ: - ஓம் புவ: - ஓகும்ஸுவ: - ஓம் மஹ: - ஓம் ஜந: - ஓம் தப: - ஓகும் ஸத்யம் - ஓம் தத்ஸவிதுர் வரேண்யம் - பர்கோ தேவஸ்ய தீமஹி - தியோ யோ ந: ப்ரசோதயாத் - ஓமாப: - ஜ்யோதீரஸ: - அம்ருதம் ப்ரஹ்ம-பூர்புவஸ்ஸுவரோம்'

**சங்கல்பம்**

மமோபாத்த ஸமஸ்த துரித க்ஷயத்வாரா ஸ்ரீ பரமேஸ்வர ப்ரீத்யர்த்தம், கரிஷ்ய மாணஸ்ய கர்மண: நிர்விக்நேந பரிஸமாப் த்யர்த்தம் ஆதௌ விக்நேஸ்வர பூஜாம் கரிஷ்யே!

**1. ஆஸந பூஜை**

ப்ருதிவ்யா: மேருப்ருஷ்ட்ட ருஷி: - ஸுதலம் ச்சந்த: - கூர்மோதேவதா!
ப்ருத்வி த்வயா த்ருதா லோகா தேவி த்வம் விஷ்ணுநா த்ருதா !
த்வம் ச தாரய மாம் தேவி பவித்ரம் குரு சாஸநம் !!

**2. கண்ட பூஜை**

ஆகமார்த்தம் து தேவாநாம் கமநார்த்தம் து ரக்ஷஸாம் !
கண்டாரவம் கரோம்யாதௌ தேவதாஹ்வாந லாஞ்ச்சநம் !!
(மணி அடிக்கவும்)

**3. விக்நேஸ்வர பூஜை**

(மஞ்சள் பிள்ளையார் செய்து வைத்து கையில் புஷ்பம் அக்ஷதை எடுத்துக்கொண்டு)

கணாநாம் த்வா கணபதிகும் ஹவாமஹே !
கவிம் கவீநாம் உபமஸ்ரவஸ்தமம் !
ஜ்யேஷ்ட ராஜம் ப்ரஹ்மணாம் பரஹ்மணஸ்பதே
ஆந: ஸ்ருண்வந் நூதிபிஸ் ஸீத ஸாதநம் !!
அஸ்மிந் ஹிரித்ராபிம்பே மஹாகணபதிம் த்யாயாமி
மஹா கணாதிபதயே நம: ஆஸநம் ஸமர்ப்பயாமி

மஹா கணாதிபதயே நம: அர்க்யம் ஸமர்ப்பயாமி
" " பாத்யம் "
" " ஆசமநீயம் "
" " ஔபசாரிகஸ்நாநம் "
" " ஸ்நாநாநந்தரம் ஆசமநீயம் "
" " வஸ்த்ரார்த்தம் அக்ஷதாந் "
" " யக்ஞோபவீதார்த்தம் அக்ஷதாந் "
" " கந்தாந் தாரயாமி "
" " கந்தஸ்யோபரி அக்ஷதாந் "
" " அலங்கரணார்த்தம் அக்ஷதாந் "
" " அக்ஷநாத் "
" " புஷ்பை: பூஜயாமி

(புஷ்பம், அக்ஷதையால் மஞ்சள் பிள்ளையாருக்குப் பூஜை செய்யவும்)

ஓம் ஸுமுகாய நம: ஓம் தூமகேதவே நம:
ஓம் ஏகதந்தாய நம: ஓம் கணாத்யக்ஷாய நம:
ஓம் கபிலாய நம: ஓம் பாலசந்த்ராய நம:
ஓம் கஜகர்ணகாய நம: ஓம் கஜாநநாய நம:
ஓம் லம்போதராய நம: ஓம் வக்ரதுண்டாய நம:
ஓம் விகடாய நம: ஓம் ஸுர்ப்ப கர்ணாய நம:
ஓம் விக்நராஜாய நம: ஓம் ஹேரம்பாய நம:
ஓம் கணாதிபாய நம: ஓம் ஸ்கந்த பூர்வஜாய நம:

ஓம் மஹாகணாதிபதயே நம: நாநாவித பரிமள பத்ர புஷ்பாணி ஸமர்ப்பயாமி

தூப, தீபார்த்தம் அக்ஷதாந் ஸமர்ப்பயாமி.

(வெற்றிலை, பாக்கு, பழம், வெல்லம் நிவேதனம் செய்யவும்)

**நிவேதந மந்த்ரங்கள்:**

ஓம் பூர்புவஸ்ஸுவ: ! தத்ஸவிதுர் வரேண்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி, தியோ யோ ந: பரசோதயாத் ! தேவஸ்ஸவித: ப்ரஸுவ ! ஸத்யம் த்வர்த்தேந பரிஷிஞ்சாமி! அம்ருதமஸ்து அம்ருதோபஸ்தரண மஸி ! ஸ்வாஹா ! ஓம் ப்ராணாய ஸ்வாஹா ! ஓம் அபாநாய ஸ்வாஹா! ஓம் வ்யாநாய ஸ்வாஹா! ஓம் உதாநாய ஸ்வாஹா! ஓம் ஸமாநாய ஸ்வாஹா ! ஓம் ப்ரஹ்மணே ஸ்வாஹா ! ப்ரஹ்மணிமே ஆத்மாம்ருதத்வாய !!

மஹாகணாதிபதியே குள கண்ட, கதலி பல நிவேதநம் ஸமர்ப்பயாமி

மத்யே மத்யே அம்ருத பாநீயம் ஸமர்ப்பயாமி

(உத்தரணியில் தீர்த்தம் எடுத்து விடவும்)

அம்ருதா பிதாநமஸி ! உத்தராபோஜநம் ஸமர்ப்பயாமி

(உத்தரணியில் தீர்த்தம் எடுத்து விடவும்)

தாம்பூலம் ஸமர்ப்பயாமி

(உத்தரணியில்தீர்த்தம் எடுத்துத் தாம்பூலத்தில் விடவும்.

கற்பூரம் ஏற்றவேண்டும் - நீராஜநம் ஸமர்ப்பயாமி

நீராஜநாநந்தரம் ஆசமநீயம் ஸமர்ப்பயாமி

(உத்தரணியில் தீர்த்தம் எடுத்து விடவும்)

**பிரார்த்தனை**

வக்ரதுண்ட மஹாகாய ஸூர்யகோடி ஸமப்ரப !
அவிக்நம் குரு மே தேவ ஸர்வ கார்யேஷு ஸர்வதா !!

(ப்ரதக்ஷிணமும் நமஸ்காரமும் செய்யவும்)

கணபதி ப்ரஸாதம் சிரஸா க்ருஹ்ணாமி

(கணபதி ப்ரஸாதத்தை சிரஸில் தரித்துக் கொள்ளவேணும்)

**ஸ்ரீ சங்கர பகவத்பாத பூஜை**

சுக்லாம்பரதரம் விஷ்ணும் சசிவர்ணம் சதுர்ப்புஜம் !
ப்ரஸந்ந வதனம் த்யாயேத் ஸர்வ விக்நோபசாந்தயே !!

**ப்ராணாயாமம்**

ஓம் பூ: - ஓம் புவ: - ஓகும்ஸுவ: - ஓம் மஹ: - ஓம் ஜந:-ஓம் தப: - ஓகும் ஸத்யம் - ஓம் தத்ஸவிதுர் வரேண்யம் - பர்கோ தேவஸ்ய தீமஹி - தியோ யோ ந: ப்ரசோதயாத் - ஓமாப: - ஜ்யோதீரஸோ (அ)ம்ருதம் ப்ரஹ்ம - பூர்புவஸ்ஸுவரோம்

**ஸங்கல்பம்**

மமோபாத்த ஸமஸ்த துரித க்ஷய த்வாரா ஸ்ரீ பரமேஸ்வர ப்ரீத்யர்த்தம் ஸுபே ஸோபநே முஹூர்த்தே - ஆத்ய ப்ரஹ்மண: - த்விதீய பரார்த்தே - ஸ்வேத வராஹ கல்பே - வைவஸ்வத மந்வந்தரே - அஷ்டாவிம்ஸதிதமே - கலியுகே - ப்ரதமேபாதே ஜம்பூத்வீபே பாரத வர்ஷே - பரதகண்டே - மேரோ: தக்ஷிணே பார்ஸ்வே - ஸகாப்தே - அஸ்மிந் வர்த்தமாநே வ்யாவஹாரிகே - ப்ரபவாதி ஷஷ்டி

ஸம்வத்ஸராணாம் மத்யே ......... நாம ஸம்வத்ஸரே - உத்தராயணே வசந்த ருதௌ ......... மாஸே சுக்ல பக்ஷே பஞ்சம்யாம் சுபதிதௌ ......... வாஸர யுக்தாயாம் ......... நக்ஷத்ர யுக்தாயாம் சுப நக்ஷத்ர ......... யோக ......... கரண ச ஏவங்குண விஸேஷண விஸிஷ்டாயாம் அஸ்யாம் பஞ்சம்யாம் ஸுபதிதௌ அஸ்மாகம் ஸகுடும்பானாம் க்ஷேமஸ்தைர்ய, வீர்ய விஜய ஆயுராரோக்ய, ஐஸ்வர்யாணாம் அபிவ்ருத்தயர்த்தம், இஷ்ட காம்யார்த்த சித்தயர்த்தம், சர்வாரிஷ்ட நிவ்ருத்தயர்த்தம், தர்மார்த்த காம மோக்ஷ சதுர் வித புருஷார்த்த சித்தயர்த்தம், சர்வாபீஷ்ட சித்தயர்த்தம், வைதிக மார்க்க ப்ரதிஷ்டாபகானாம் ஜகத்குரூணாம் ஸ்ரீ சங்கர பகவத்பாதானாம் ப்ரீத்யர்த்தம், ப்ரஸாத சித்தயர்த்தம், ப்ரசாதேன ஞாந வைராக்ய ஸித்யர்த்தம், வைசாக சுத்த பஞ்சம்யாம் யதாஸக்தி த்யாந - ஆவாஹநாதி ஷோடஸோபசாரை: ஸ்ரீ சங்கர பகவத்பாத பூஜாம் கரிஷ்யே!! (உத்தரணியில் தீர்த்தம் எடுத்துக் கைகளைத் துடைத்துக் கொள்ள வேண்டும்). மணியை அடிக்கவும். 'ததங்கம் கலஸ பூஜாம் கரிஷ்யே!' என்று சொல்லவும்.

விக்நேஸ்வர உத்யாயபநம்: 'ஸ்ரீ விக்நேஸ்வரம் யதாஸ்தாநம் ப்ரதிஷ்ட்டாபயாமி ! சோபநார்த்தே க்ஷேமாய புநராகமநாய ச' என்று சொல்லி, மஞ்சள் பிள்ளையார் மீது புஷ்பம் அக்ஷதை ஸமர்ப்பித்து வடக்காகப் பிள்ளையாரை நகர்த்த வேண்டும்.

**கலச பூஜை**

(சந்தனம், குங்குமம், அக்ஷதை இவைகளால் கலசத்தை அலங்கரித்துக் கையால் மூடிக்கொண்டு)

கலஸஸ்ய முகே விஷ்ணு: கண்டே ருத்ர: ஸமாஸ்ரித: !
மூலே தத்ர ஸ்திதோ ப்ரஹ்மா மத்யே மாத்ருகணா: ஸ்ம்ருதா: !!

குக்ஷௌ து ஸாகரா:ஸர்வே ஸப்த த்வீபா வஸுந்தரா !
ருக்வேதோ(அ)த யஜுர்வேத: ஸாமவேதோ ப்யதர்வண: !!

அங்கைஸ்ச ஸஹிதா: ஸர்வே கலஸாம்பு ஸமாஸ்ரிதா: !
ஆயாந்து தேவ பூஜார்த்தம் துரிதக்ஷயகாரகா: !!

கங்கே ச யமுநே சைவ கோதாவரி ஸரஸ்வதி !
நர்மதே ஸிந்து காவேரி ஜலேஸ்மிந் ஸந்நிதிம் குரு !!

(என்று ஜபித்து, கலச தீர்த்தம் சிறிதளவு எடுத்து பூஜாத் திரவியங்களையும் தன்னையும் ப்ரோக்ஷணம் செய்துகொள்ள வேண்டும்.)

## ப்ரதான பூஜை

### தியானம்

ஸ்ருதி ஸ்ம்ருதி புராணாநாம் ஆலயம் கருணாலயம் !
நமாமி பகவத்பாத சங்கரம் லோகசங்கரம் !!
அஸ்மின்பிம்பே(சித்ரே) ஸ்ரீபகவத்பாதம் த்யாயாமி!

### ஆவாஹனம்

யமாஸ்ரிதா கிராம் தேவி நந்தயத்யாத்ம சம்ஸ்ரிதான் !
தமாஸ்ரயே ஸ்ரியா ஜுஷ்டம் சங்கரம் கருணாநிதிம் !!
ஸ்ரீ சங்கர பகவத்பாதம் ஆவாஹயாமி !

### ஆசனம்

ஸ்ரீ குரும் பகவத்பாதம் ஸரண்யம் பக்தவத்சலம் !
சிவம் சிவகரம் சுத்தம் அப்ரமேயம் நமாம்யஹம் !!
ஸ்ரீ சங்கர பகவத்பாதாய நம: ஆசனம் சமர்ப்பயாமி !

### பூர்ணகும்ப ப்ரதானம்

நித்யம் சுத்தம் நிராகாரம் நிராபாசம் நிரஞ்சனம் !
நித்யபோதம் சிதானந்தம் குரும் ப்ரஹ்ம நமாம்யஹம்!!
ஸ்ரீ சங்கர பகவத்பாதாசார்யேப்யோ நம: பூர்ணகும்பம் ஸமர்ப்பயாமி !

### பாத்யம்

ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ராய சதாத்ம அத்வைத ரூபிணே !
ஸ்ரீமதே சங்கரார்யாய வேதாந்த குரவே நம: !!
ஸ்ரீ சங்கர பகவத்பாதாய நம: பாதயோ: பாத்யம் சமர்ப்பயாமி !

### அர்க்யம்

வேதாந்தார்தாபி தானேன ஸர்வாநுக்ரஹகாரிணம் !
யதி ரூப தரம் வந்தே சங்கரம் லோகசங்கரம் !!
ஸ்ரீசங்கர பகவத்பாதாய நம: ஹஸ்தயோ அர்க்யம் சமர்ப்பயாமி!

### ஆசமநீயம்

சம்சாராப்தி நிஷண்ணாஞ நிகரப்ரோத்திதீர்ஷயா !
க்ருதசம்ஹனனம் வந்தே பகவத்பாத சங்கரம் !!
ஸ்ரீ சங்கர பகவத் பாதாய நம: ஆசமநீயம் சமர்ப்பயாமி !

**ஸ்நாநம்**

யத் பாதபங்கஜ த்யாநாத் தோடகாத்யா யதீஸ்வரா: !
பபூவுஸ்தாத்த்ருசம் வந்தே சங்கரம் ஷண்மதேஸ்வரம் !!
ஸ்ரீ சங்கர பகவத் பாதாய நம: ஸ்நாபயாமி !

(ஸ்ரீ ருத்ர - சமக - புருஷஸூக்த - உபநிஷத்பி: ஸ்நாபயித்வா)
ஸ்நாநாநந்தரம் ஆசமநீயம் சமர்ப்பயாமி !!

**வஸ்த்ரம்**

நம: சங்கராசார்ய குரவே சங்கராத்மநே !
சரீரிணாம் சங்கராய சங்கர ஞானஹேதவே !!
ஸ்ரீ சங்கர பகவத்பாதாய நம: வஸ்த்ரம் சமர்ப்பயாமி !

**உபவீதம்**

ஹரலீலாவதாராய சங்கராய வரௌஜஸே !
கைவல்ய கலனா கல்பதரவே குரவே நம: !!
ஸ்ரீ சங்கர பகவத்பாதாய நம: உபவீதம் சமர்ப்பயாமி !

**ஆபரணம்**

விசார்யம் சர்வவேதாந்தை: சஞ்சார்யம் ஹ்ருதயாம்புஜே !
ப்ரசார்யம் சர்வலோகேஷு ஆசார்யம் சங்கரம் பஜே !!
ஸ்ரீ சங்கர பகவத்பாதாய நம: ருத்ராக்ஷமாலாம் சமர்ப்பயாமி !

**கந்தம்**

யாஅநுபூதி: ஸ்வயம் ஜ்யோதிராதித்யேசான விக்ரஹா !
சங்கராக்யா ச தந்நௌமி சுரேஸ்வரகுரும் பரம் !!
ஸ்ரீ சங்கர பகவத்பாதாய நம: கந்த பஸ்மாதிகம் சமர்ப்பயாமி

**தண்டசமர்ப்பணம்**

ஆநந்தகனமத்வந்த்வம் நிர்விகாரம் நிரஞ்சனம் !
பஜே(அ)ஹம் பகவத்பாதம் பஜதாமபயப்ரதம் !!
ஸ்ரீ சங்கர பகவத்பாதாய நம: தண்டம் சமர்ப்பயாமி

**அக்ஷத சமர்ப்பணம்**

தம் வந்தே சங்கராசார்யம் லோகத்ரிதயசங்கரம் !
சத்தர்க்கநகரோத்கீர்ண வாவதூகமதங்கஜம் !!
ஸ்ரீ சங்கர பகவத்பாதாய நம: அக்ஷதான் சமர்ப்பயாமி

புஷ்பமாலா

நமாமி சங்கராசார்ய குருபாதசரோருஹம் !
யஸ்ய ப்ரசாதான்மூடோ(அ)பி சர்வக்ஞோ பவதி ஸ்வயம் !!
ஸ்ரீ சங்கர பகவத்பாதாய நம: புஷ்பமாலாம் சமர்ப்பயாமி

**அங்க பூஜை**

| | | | | |
|---|---|---|---|---|
| ஓம் | அஷ்டவர்ஷசதுர்வேதினே | நம: | பாதெள | பூஜயாமி |
| " | த்வாதசோஅகிலசாஸ்த்ரவிதே | நம: | குல்பெள | பூஜயாமி |
| " | சர்வலோகக்யாதசீலாய | நம: | ஜங்கே | பூஜயாமி |
| " | ப்ரஸ்தானத்ரயபாஷ்யக்ருதே | நம: | ஜாநுநீ | பூஜயாமி |
| " | பத்மபாதாதிசச்சிஷ்யாய | நம: | ஊரு | பூஜயாமி |
| " | பாஷண்டத்வாந்தபாஸ்கராய | நம: | கடிம் | பூஜயாமி |
| " | அத்வைதஸ்தாபநாசார்யாய | நம: | குஹ்யம் | பூஜயாமி |
| " | த்வைதாதித்விபகேசரிணே | நம: | நாபிம் | பூஜயாமி |
| " | வ்யாஸநந்திதசித்தாந்தாய | நம: | உதரம் | பூஜயாமி |
| " | வாதநிர்ஜிதமண்டனாய | நம: | வக்ஷஸ்தலம் | பூஜயாமி |
| " | ஷண்மதஸ்தாபநாசார்யாய | நம: | ஹ்ருதயம் | பூஜயாமி |
| " | ஷட்குணைஸ்வர்யமண்டிதாய | நம: | கண்டம் | பூஜயாமி |
| " | சர்வலோகாநுக்ரஹக்ருதே | நம: | ஸ்கந்தெள | பூஜயாமி |
| " | சர்வக்ஞத்வாதிபூஷணாய | நம: | ஹஸ்தெள | பூஜயாமி |
| " | ஸ்ருதிஸ்ம்ருதிபுராணக்ஞாய | நம: | முகம் | பூஜயாமி |
| " | ஸ்ருத்யேகசரணப்ரியாய | நம: | நேத்ரே | பூஜயாமி |
| " | சக்ருத்ஸ்மரணசந்துஷ்டாய | நம: | கர்ணெள | பூஜயாமி |
| " | சரணாகதவத்ஸலாய | நம: | நாசிகாம் | பூஜயாமி |
| " | நிர்வ்யாஜகருணாமூர்த்தயே | நம: | லலாடம் | பூஜயாமி |
| " | நிரம்ஹுபாவகோசராய | நம: | சுபுகம் | பூஜயாமி |
| " | சசாந்தபக்தஹ்ருத்தாபாய | நம: | ஓஷ்டெள | பூஜயாமி |
| " | சர்வஞானபலப்ரதாய | நம: | கண்டஸ்தலம் | பூஜயாமி |
| " | சதசத்வஸ்துவிமுகாய | நம: | சிர: | பூஜயாமி |
| " | சத்தாசாமான்யவிக்ரஹாய | நம: | சர்வாண்யங்கானி | பூஜயாமி |

(இனி அஷ்டோத்தரசத நாமாவளியால் அர்ச்சனை செய்ய வேண்டும்)

**ஸ்ரீ பகவத்பாதாஷ்டோத்தரசத நாமாவளி :**

| | | |
|---|---|---|
| ஓம் | சங்கராசார்யவர்யாய | நம: |
| " | ப்ரஹ்மஞானப்ரதாயகாய | நம: |
| " | அக்ஞானதிமிராதித்யாய | நம: |
| " | ஸுஞானாம்புதிசந்த்ரமஸே | நம |

| | | | |
|---|---|---|---|
| ஓம் | வர்ணாஸ்ரமப்ரதிஷ்டாத்ரே | நம: | |
| ,, | ஶ்ரீமதே | நம: | |
| ,, | முக்திப்ரதாயகாய | நம: | |
| ,, | சிஷ்யோபதேச நிரதாய | நம: | |
| ,, | பக்தாபீஷ்ட ப்ரதாயகாய | நம: | |
| ,, | ஸூக்ஷ்ம தத்வ ரஹஸ்யக்ஞாய | நம: | 10 |
| ,, | கார்யா கார்ய ப்ரபோதகாய | நம: | |
| ,, | ஞானமுத்ராஞ்சித கராய | நம: | |
| ,, | சிஷ்ய ஹ்ருத்தாப ஹாரகாய | நம: | |
| ,, | பாரிவ்ராஜ்யாஸ்ரமோத் தர்த்ரே | நம: | |
| ,, | சர்வதந்த்ர ஸ்வதந்த்ர தியே | நம: | |
| ,, | அத்வைத ஸ்தாபநாசார்யாய | நம: | |
| ,, | சாக்ஷாச்சங்கர ரூபப்ருதே | நம: | |
| ,, | ஷண்மத ஸ்தாபநாசார்யாய | நம: | |
| ,, | த்ரயீமார்க ப்ரகாசகாய | நம: | |
| ,, | வேதவேதாந்த தத்வக்ஞாய | நம: | 20 |
| ,, | துர்வாதிமதகண்டநாய | நம: | |
| ,, | வைராக்ய நிரதாய | நம: | |
| ,, | சாந்தாய | நம: | |
| ,, | சம்சாரார்ணவ தாரகாய | நம: | |
| ,, | ப்ரசன்ன வதனாம்போஜாய | நம: | |
| ,, | பரமார்த்த ப்ரகாசகாய | நம: | |
| ,, | புராண ஸ்ம்ருதி சாரக்ஞாய | நம: | |
| ,, | நித்ய த்ருப்தாய | நம: | |
| ,, | மஹதே | நம: | |
| ,, | ஸுசயே | நம: | 30 |
| ,, | நித்யானந்தாய | நம: | |
| ,, | நிராதங்காய | நம: | |
| ,, | நிஸ்சங்காய | நம: | |
| ,, | நிர்மலாத்மகாய | நம: | |
| ,, | நிர்மமாய | நம: | |
| ,, | நிரஹங்காராய | நம: | |
| ,, | விஸ்வ வந்த்ய பதாம்புஜாய | நம: | |
| ,, | சத்வ ப்ரதானாய | நம: | |
| ,, | சத்பாவாய | நம: | |
| ,, | சங்க்யாதீத குணோஜ்வலாய | நம: | 40 |
| ,, | அநகாய | நம: | |

ஓம் சாரஹ்ருதயாய நம:
" ஸு்தியே நம:
" சாரஸ்வத ப்ரதாய நம:
" சத்யாத்மநே நம:
" புண்யசீலாய நம:
" சாங்க்யயோக விசக்ஷணாய நம:
" தபோராஸயே நம:
" மஹாதேஜஸே நம:
" குணத்ரய விபாகவிதே நம: 50
" கலிக்னாய நம:
" காலதர்மஞாய நம:
" தமோகுண நிவாரகாய நம:
" பகவதே நம:
" பாரதி ஜேத்ரே நம:
" சாரதாஹ்வான பண்டிதாய நம:
" தர்மாதர்ம விபாகக்ஞாய நம:
" லக்ஷ்யமேத ப்ரதர்சகாய நம:
" நாதபிந்துகலாபிக்ஞாய நம:
" யோகிஹ்ருத்பத்மபாஸ்கராய நம: 60
" அதீந்த்ரிய ஞானநிதயே நம:
" நித்யாநித்ய விவேகவதே நம:
" சிதானந்தாய நம:
" சின்மயாத்மநே நம:
" பரகாய ப்ரவேசக்ருதே நம:
" அமானுஷ சரித்ராட்யாய நம:
" க்ஷேமதாயினே நம:
" க்ஷமாகராய நம:
" பவ்யாய நம:
" பத்ரப்ரதாய நம: 70
" பூரிமஹிம்னே நம:
" விஸ்வரஞ்சகாய நம:
" ஸ்வப்ரகாஸாய நம:
" சதாதாராய நம:
" விஸ்வபந்தவே நம:
" சுபோதயாய நம:
" விசாலகீர்தயே நம:
" வாகீசாய நம:

ஓம் சர்வலோக ஹிதோத்சுகாய நம:
" கைலாஸ யாத்ரா சம்ப்ராப்த
சந்த்ரமௌலிப்ரபூஜகாய நம: 80
" காஞ்ச்யாம் ஸ்ரீசக்ரராஜாக்ய
யந்த்ரஸ்தாபனதீக்ஷிதாய நம:
" ஸ்ரீசக்ராத்மகதாடங்க
போஷிதாம்பா மநோரதாய நம:
" ஸ்ரீப்ரஹ்மசூத்ரோபநிஷத்
பாஷ்யாதி க்ரந்தகல்பகாய நம:
" சதுர்திக் சதுராம்நாய ப்ரதிஷ்டாத்ரே நம:
" மஹாமதயே நம:
" த்விசப்ததி மதோச்சேத்ரே நம:
" சர்வதிக் விஜயப்ரபவே நம:
" காஷாயவசனோபேதாய நம:
" பஸ்மோத்தூளித விக்ரஹாய நம:
" ஞானாத்மைகதண்டாட்யாய நம: 90
" கமண்டலுலஸத்கராய நம:
" வ்யாச சம்தர்சனப்ரீதாய நம:
" பகவத் பாத சம்ஞகாய நம:
" சது:ஷஷ்டிகலாபிக்ஞாய நம:
" ப்ரஹ்மராக்ஷஸ தோஷகாய நம:
" சௌந்தர்யலஹரிமுக்ய ப்ஹு
ஸ்தோத்ர விதாயகாய நம:
" ஸ்ரீமன் மண்டனமிஸ்ராக்ய
ஸ்வயம்பூஜயசந்நுதாய நம:
" தோடகாசார்ய சம்பூஜ்யாய நம:
" பத்மபாதார்சிதாங்க்ரிகாய
" ஹஸ்தாமலகயோகீந்த்ர ப்ரஹ்ம -
ஞானப்ரதாயகாய நம: 100
" ஸுரேஸ்வராதி ஷட்சிஷ்ய
சந்யாஸ்ரம தாயகாய நம:
" நிர்வ்யாஜ கருணாமூர்த்தயே நம:
" ஜகத்பூஜ்யாய நம:
" ஜகத்குரவே நம:
" பேரிபடஹவாத்யாதிராஜ லக்ஷண லக்ஷிதாய நம:
" சக்ருத் ஸ்மரண சந்துஷ்டாய நம:
" சர்வக்ஞாய நம:

ஓம் ஞானதாயகாய நம: 108
ஸ்ரீ சங்கர பகவத் பாதாய நம:
அஷ்டோத்ர சத நாமார்ச்சனாம் சமர்ப்பயாமி

## தூபம்

சம்சார சாகரம் கோரம் அநந்த க்லேசபாஜனம் !
த்வமேவ சரணம் ப்ராப்ய நிஸ்தரந்தி மநீஷிண: !!
ஸ்ரீ சங்கர பகவத் பாதாய நம: தூபம் ஆக்ராபயாமி

## தீபம்

நமஸ்தஸ்மை பகவதே சங்கராசார்ய ரூபிணே !
யேன வேதாந்த வித்யேயம் உத்த்ருதா வேதசாகராத் !!
ஸ்ரீ சங்கர பகவத்பாதாய நம: தீபம் தர்ஸ்யாமி

## நைவேத்யம்

பகவத்பாதபாதாப்ஜ பாம்சவஸ்சன்து சந்ததம் !
அபாராசார சம்சார சாகரோத்தார சேதவ: !!-

ஸ்ரீ சங்கர பகவத் பாதாய நம: சால்யன்னம் ஷட்ரசோபேதம் சதுர்வித பக்ஷ்ய - போஜ்ய - லேஹ்ய சோஷ்ய ஸஹிதம் மஹா நைவேத்யம் நிவேதயாமி ! நிவேத நானந்தரம் ஆசமநீயம் சமர்ப்பயாமி !

ஹஸ்த ப்ரக்ஷாலன, பாத ப்ரக்ஷாலனாதிகம் சமர்ப்பயாமி !
தாம்பூலம் சமர்ப்பயாமி !

## நீராஜனம்

அக்ஞானதிமிராந்தஸ்ய ஞானாஞ்சனசலாகயா !
சக்ஷுருன்மீலிதம் யேன தஸ்மை ஸ்ரீ குரவே நம: !!
ஸ்ரீ சங்கர பகவத் பாதாய நம: கர்ப்பூர நீராஜனம் சமர்ப்பயாமி !
நீராஜனானந்தரம் ஆசமநீயம் சமர்ப்பயாமி!

## ப்ரதக்ஷிணம்

யானி கானி ச பாபாநி ஜன்மாந்தர க்ருதானி ச !
தானி தானி விநஸ்யந்தி ப்ரதக்ஷிண பதேபதே !!

ஆசார்யான் பகவத்பாதான் ஷண்மதஸ்தாபகான் ஹிதான் !
பரஹும்சாந்நுமோ(அ)த்வைதஸ்தாபகான் ஜகதோ குருன் !!
ப்ரதக்ஷிண நமஸ்காரான் சமர்ப்பயாமி !

## ப்ரார்த்தனை

குருர்ப்ரஹ்மா குருர்விஷ்ணு குருர்தேவோ மஹேஸ்வர: !
குருரேவ பரம் ப்ரஹ்ம தஸ்மை ஸ்ரீ குரவே நம: !!

அகண்டமண்டலாகாரம் வ்யாப்தம் யேன சராசரம் !
தத்பதம் தர்சிதம் யேன தஸ்மை ஸ்ரீ குரவே நம: !!

அநேகஜன்ம சம்ப்ராப்த கர்மபந்தவிதாஹினே !
ஆத்மஞானப்ரதாநேன தஸ்மை ஸ்ரீ குரவே நம: !!

விசுத்தவிக்ஞானகனம் சுசிஹார்தம் தமோநுதம் !
தயாசிந்தும் லோகபந்தும் சங்கரம் நௌமி சத்குரும் !!

தேஹபுத்தயா து தாஸோஅஸ்மி ஜீவபுத்தயா த்வதம்சக: !
ஆத்மபுத்தயா த்வமேவாஹமிதி மே நிஸ்சிதா மதி: !!

ஏகஸ்ஸாகி சங்கராக்யாச்சதுர்தா
ஸ்தானம் பேஜே தாபசாந்த்யை ஜனானாம் !
சிஷ்யஸ்கந்தை: சிஷ்ய சாகைர்மஹத்பி:
ஞானம் புஷ்பம் யத்ர மோக்ஷ: ப்ரஸூதி: !!

காமாக்ரம்ய பதேஅதிகாஞ்சி நிபிடம் ஸ்கந்தைஸ்சதுர்பிஸ்ததா
வ்யாவ்ருண்வன் புவனாந்தரம் ப்ரிஹரம் ஸ்தாப சமோஹஜ்வரம்!

யஸ்ஸாகி த்விஜ சம்ஸ்துத: பலதி தத் ஸ்வாத்யம் ரசாக்யம் பலம்
தஸ்மை சங்கரபாதபாய மஹதே தன்ம: த்ரிசந்த்யம் நம: !!

## குருபாதோதகப்ராஸனம்

அவித்யாமூலநாசாய ஜன்மகர்ம நிவ்ருத்தயே !
ஞானவைராக்ய சித்த்யர்த்தம் குரு பாதோதகம் சுபம் !!
குருபாதோதகம் ப்ராஸயாமி

காயேன வாசா மனசேந்த்ரியைர்வா
புத்யாத்மனா வா ப்ருக்ருதே: ஸ்வபாவாத் !
கரோமி யத்யத் சகலம் பரஸ்மை
நாராயணாயேதி சமர்ப்பயாமி !!

அனயா பூஜயா சர்வதேவாத்மக: பகவான் ஸ்ரீ ஜகத்குரு:
ப்ரீயதாம் !! ஓம் தத் சத் !!

**சுபமஸ்து.**

## ஸ்ரீசங்கர பகவத்பாத ஸ்தோத்திரம்
## ஸ்ரீ தோடகாஷ்டகம்

1. விதிதாகில சாஸ்த்ர ஸுதா ஜலதே
மஹிதோப நிஷத் கதிதார்த்த நிதே!
ஹ்ருதயே கலயே விமலம் சரணம்
பவ சங்கர தேசிக மே சரணம் (1)

2. கருணா வருணாலய பாலய மாம்
பவஸாகரதுக்க விதூன ஹ்ருதம் !
ரசயாகிலதர்சன தத்வவிதம்
பவ சங்கர தேசிக மே சரணம் (2)

3. பவதா ஜனதா ஸுஹிதா பவிதா
நிஜபோத விசாரண சாருமதே !
கலயேச்வர ஜீவ விவேக விதம்
பவ சங்கர தேசிக மே சரணம் (3)

4. பவ ஏவ பவானிதி மே நிதராம்
ஸமஜாயத சேதஸி கௌதுகிதா !
மம வாரய மோஹமஹாஜலதிம்
பவ சங்கர தேசிக மே சரணம் (4)

5. ஸுக்ருதே அதிக்ருதே பஹுதா பவதோ
பவிதா ஸமதர்சன லாலஸதா !
அதி தீனமிமம் பரிபாலய மாம்
பவ சங்கர தேசிக மே சரணம் (5)

6. ஜகதீ மவிதும் கலிதாக்ருதயோ
விசரந்தி மஹா மஹஸச்சலத: !
அஹிமாம் சுரிவாத்ர விபாஸி புரோ
பவ சங்கர தேசிக மே சரணம் (6)

7. குருபுங்கவ புங்கவகேதந தே
ஸமதா மயதாம் நஹி கோஅபி ஸுதீ: !
சரணாகதவத்ஸல தத்வ நிதே
பவ சங்கர தேசிக மே சரணம் (7)

8. விதிதா ந மயா விசதைக கலா
ந ச கிஞ்சன காஞ்சனமஸ்தி குரோ
த்ருதமேவ விதேஹி க்ருபாம் ஸஹஜாம்
பவ சங்கர தேசிக மே சரணம் (8)

வேதமே தர்மத்தின் மூலம்

# ஸ்ரீ ஆதி சங்கரரின் திவ்ய சரித்திரம் மற்றும் பூஜாவிதி



*Compiled by*

பி.ஆர். நடராஜன்

*Published by*

வேலூர் மஹா ருத்ரயாக கமிட்டி

92, L.I.C. காலனி, காகிதப்பட்டறை, வேலூர் - 632012